Regd. No. M. 6934

Phone: No. 2241

**நேரு-நூன் பேச்சு வார்த்தைகள்**

புதுடில்லி, செப். 8—

இந்தியப் பிரதம மந்திரிக்கும், பாகிஸ்தான் பிரதம மந்திரிக்கும் இடையே எல்லைப் பிரச்சினைப் பற்றி நாளை (செப். 9) பிற்பகலில் பேச்சு வார்த்தைகள் ஆரம்பமாகின்றன. புதுடில்லி பாலம் விமான நிலையத்தில் நூன் பாக் பிரதமர் பெரோஸ்கான் நூனை பிரதமர் நேரு வரவேற்பார்.

ஜனசக்தி

ஆசிரியர்: ப. ஜீவானந்தம்

JANASAKTHI

**அமெரிக்கப் படைகளே வெளியேறுக!**

கெய்ரோ, செப். 8—

ஜோர்டானிலிருந்தும், லெபனானிலிருந்தும் பிரிட்டிஷ், அமெரிக்கப் படைகள் வெகு விரைவில் வெளியேற வேண்டியதின் அவசியத்தை இராக் பிரதம மந்திரி பிரிகேடியர் காஸிம், ஐ. நா. பொதுச் செயலாளர் ஹாமர்ஷோல்டிடம் வலியுறுத்தியுள்ளார். அப்பொழுதுதான் மத்திய கிழக்கில் சமாதானமும், ஸ்திரத்தன்மையும் ஏற்படும் என்றும் கூறியுள்ளார்.

மலர் 15 இதழ் 26 ] சென்னை 10-9-58 விளம்பி ஆவணி 25உ புதன் கிழமை (வெளியூர் பதிப்பு) [ 4 பக்கங்கள் 7 காசுகள்

# அமெரிக்கக் கடற்படையை வாபஸ் பெறுக

## ஆக்கிரமிப்பாளர்களை மக்கள் தூக்கிலிடுவர்

### சீனத் தலைவர் மாசே-துங் எச்சரிக்கை



### அமெரிக்க-சீன பேச்சு வார்த்தைகளில் நம்பிக்கை

**இருதரப்பிலும் நல்ல எண்ணம் வேண்டுமென்கிறார்**

ஹாங்காங், செப். 8—

வார்சாவில் அமெரிக்காவுக்கும் மக்கள் சீனாவுக்குமிடையே ஸ்தானிகர் மட்டத்தில் நடைபெற இருக்கும் பேச்சு வார்த்தைகள் பற்றி தாம் நம்பிக்கையோடிருப்பதாக சீனத் தலைவர் மா சே-துங் இன்று கூறினார்.

மா சே-துங் மேலும் கூறுகையில் இந்த உத்தேசப் பேச்சு வார்த்தைகள் தூரக் கிழக்குப் பிரச்னையில் சில உருப்படியான பலன்கள் ஏற்பட வழி கோலலாம், ஆனால் இதற்கு இரு தரப்பினரிடையேயும் உள்ளப் பூர்வமான ஆர்வம் வேண்டும் என்றார்.

கடந்த 9 வருடங்களாக அமெரிக்க ஏகாதிபத்தியம் சீனாவுக்குச் சொந்தமான தைவானை ஆக்ரமித்துக் கொண்டிருக்கிறது. அதே போல இப்போது லெபனானை ஆக்ரமித்துக் கொண்டிருக்கிறது. அமெரிக்கா உலகெங்கிலும் பல நாடுகளில் நூற்றுக் கணக்கான ராணுவ தளங்களை அமைத்துக் கொண்டுள்ளது. இவையெல்லாம் தனது கழுத்தைச் சுற்றி மாட்டிக்கொண்டுள்ள சுருக்காகும். இந்த சுருக்குக் கயிற்றின் ஒரு முனையை சீனமக்களிடமும், அராபிய மக்களிடமும் இன்னும் சமாதானத்தையும் சுதந்திரத்தையும் விரும்பும் மக்களிடமும் கொடுத்துள்ளது. இந்தப் பகுதிகளிலெல்லாம் அமெரிக்க ஆக்ரமிப்பாளர்கள் நீடிக்க அவர்களது கழுத்தைச் சுற்றியுள்ள இந்த சுருக்குக் கயிர் இறுகவே செய்யும் என்றார்.

உலகம் எங்கிலும் நெருக்கடியான நிலையை உண்டுபண்ணி அதில் பயனடைய அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் கனவு காண்கிறார்கள். ஆனால் அவர்கள் நினைப்பதற்கு நேர்மாறான காரியங்கள் நடந்து வருவதோடு அமெரிக்க ஆக்ரமிப்பை எதிர்த்து உலகம் பூராவும் ஒன்றுபடும் நிலையையும் அனுஷ்டித்திருக்கிறது என்றார்.

**தூக்கிலிடப்படுவார்கள்**

ஆக்ரமிப்பு நடத்தும், யுத்தத்தை மூட்டிவிடும் கொள்கையை இனியும் தொடர்ந்து அமெரிக்க ஏகபோக முதலாளித்துவச்சட்டம் அனுஷ்டிக்குமானால் உலக மக்களால் அவர்கள் தூக்கிலிடப் படுவார்கள் என்று எச்சரித்தார்.

**மீண்டும் சீன எச்சரிக்கை**

பீகிங், செப். 8—

அமெரிக்காவுக்கு இன்று இரண்டாவது தடவையாக மக்கள் சீனா கடும் எச்சரிக்கை விடுத்தது. சீனாவின் 12 மைல் கடல் பிரதேசத்திற்குள் அமெரிக்கக் கப்பல்கள் நுழைந்தபோது நேற்று முதலாவது எச்சரிக்கை விடுக்கப்பட்டது. இந்த எச்சரிக்கையையும் மீறி இன்று மீண்டும் அமெரிக்கக் கப்பல்கள் சீனாவுக்கு சொந்தமான கடலோரப் பகுதியில் பிரவேசித்தன. இதைத் தொடர்ந்து இன்று இரண்டாவது தடவையாக முழு எச்சரிக்கை செய்திருப்பதாக பீகிங் ரேடியோ அறிவித்தது. சீனாவின் ஆதிபத்திய உரிமைக்கும் சுதந்திரத்திற்கும் அமெரிக்காவின் இந்த அத்துமீறிய செய்கை ரொம்பவும் ஆபத்தானது என்று ஒரு உயர்தர சீன அதிகாரி கூறினார்.

**டல்லஸ் கூற்று**

வாஷிங்டன், செப். 8—

மக்கள் சீன சர்க்கார் நிர்ணயித்துள்ள 12 மைல் கடல் எல்லைப் பகுதியில் அமெரிக்கக் கப்பற்படை நுழைந்ததானது சீனாவோடு நடத்த உத்தேசித்துள்ள பேச்சுவார்த்தைகளுக்குக் குந்தகம் விளைவிக்க வேண்டியதில்லை என்று அமெரிக்க ராஜாங்க மந்திரி டல்லஸ் இன்று தெரிவித்தார்.

### சென்னை சட்டசபையில்: ஒத்திவைப்புப் பிரேரணை

சென்னை, செப். 9—

நேற்று சென்னை நகரில் நடந்த துணிகரக் கொள்ளையால் நகரில் ஒரு பாதுகாப்பின்மை உணர்ச்சி ஏற்பட்டுள்ளதால் அதுபற்றி விவாதிக்க சட்டச[illegible]வடிக்கைகளை ஒத்திவைக்கக் கோரும் ஒத்திவைப்புப் பிரேரணை எம். கல்யாணசுந்தரம், கோவிந்தசாமி, விநாயகம் ஆகியோர் கொண்டு வந்தனர்.

இதற்குப் பதிலளிக்கையில், இத்தகைய சம்பவங்கள் நடந்துள்ளதை நாங்கள் இன்று காலைப் பத்திரிகையில் தான் பார்த்ததாகவும் இது பற்றிய விபரங்கள் சேகரித்து சபை முன் வைப்பதாகவும் உள்துறை அமைச்சர் கனம் பக்தவத்சலமும் நிதி அமைச்சர் கனம் சுப்ரமண்யமும் கூறி ஒத்திவைப்புப் பிரேரணையை எதிர்த்தனர்.

சபாநாயகர் இதன் பேரில் மேற்படி பிரேரணையை நிராகரித்தார்.

## தூரக் கிழக்கு அபாய நிலைமைக்கு அமெரிக்காவே காரணம்

### கர்நாடகம் எனப் பெயரிடுக

**மைசூர் பற்றி கோரிக்கை**

பெல்லாரி, செப். 8—

மைசூர் ராஜ்யத்திற்கு கர்நாடகம் என்று பெயரிட வேண்டும் என்று முன்னாள் மைசூர் முதல் அமைச்சர் எஸ். நிஜலிங்கப்பா கேட்டுக் கொண்டார். இந்தப் புதுப் பெயர் மக்கள் உள்ளத்தில் ஒருமைப்பாட்டு கிளர்ச்சியை வளர்க்கும் என்றார்.

### ஐஸன்ஹோவருக்கு குருஷ்சேவ் எச்சரிக்கை



மாஸ்கோ, செப். 8—

அமெரிக்கக் கடற்படையை வாபஸ் பெறுதவரையில் தூரக்கிழக்கில் சமாதானம் ஏற்பட முடியாது என்று சோவியத் பிரதமர் நிகிதா குருஷ்சேவ் இன்று அமெரிக்க ஜனாதிபதி ஐஸன்ஹோவருக்கு எச்சரிக்கை விடுத்துள்ளார், என்று சோவியத் செய்தி ஸ்தாபனம்-டாஸ் இன்றிரவு அறிவித்தது.

இந்த எச்சரிக்கையை நேற்றைய தினம் குருஷ்சேவ் ஐஸன்ஹோவருக்கு அனுப்பினார், என்றும் டாஸ் அறிவித்தது.

குருஷ்சேவ் அந்த செய்தியில் கூறியிருப்பதாவது:

"தைவான் (பார்மோசா) ஜலசந்தியிலிருந்து அமெரிக்கக் கடற்படை வாபஸாகிற வரையிலும், அமெரிக்கப் படை வீரர்கள் சீனத் தீவாகிய தைவானிலிருந்து வெளியேறுகிற வரையிலும் தூரக் கிழக்கில் நிலையான சமாதானத்தைப்பற்றி நினைக்கவே முடியாது.

"சீனாவின்மீது ஏற்படும் தாக்குதலை சோவியத் யூனியன் தன் மீது ஏற்படும் தாக்குதலாகவே கருதும். பார்மோசா பிரச்சினையை ஐ. நா. சபை விவாதிக்க வேண்டும்." என்று குருஷ்சேவ் கூறினார்.

தூரக்கிழக்கில் அமெரிக்க நடவடிக்கை வெளிப்படையான ஆத்திரமூட்டும் செய்கையாகும், என்றும் குருஷ்சேவ் தெரிவித்தார்.

பயமுறுத்துவதையும், ஆத்திரமூட்டுவதையும் நோக்கமாகக் கொண்டு கப்பற்படைகளையும், விமானப்படைகளையும் உலகத்தின் ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடிக்கு வல்லரசுகள் கொண்டுபோவதைத் தடை செய்யவேண்டும். இந்தப் படைகளெல்லாம் ஒரு நாட்டின் தேசிய எல்லைகளுக்கு உள்ளேயே இருக்க வேண்டும்.

**எங்கள்மீது தாக்குதலே**

"எங்கள் நாட்டின் மகத்தான நண்பனும், நேசநாடும், அண்டைநாடுமான சீன மக்கள் குடியரசின் மீது ஏற்படும் தாக்குதல், சோவியத் யூனியன்மீது ஏற்படும் தாக்குதலேயாகும்," என்றுகுருஷ்சேவ் ஆணித்தரமாகக் கூறினார்.

"ஆகவே, கடமை யுணர்வு உள்ள சோவியத் யூனியன், சீன மக்கள் குடியரசுடன் கூட்டாக இரு நாடுகளின் பாதுகாப்பை நிலைநிறுத்தவும், தூரக் கிழக்கிலும், உலகம் முழுவதிலும் சமாதானத்தைக் காப்பதற்காகவும், தன்னால் இயன்றதனைத்தும் செய்யும்," என்றார் குருஷ்சேவ்.

**அமெரிக்க ஆக்ரமிப்பே காரணம்**

"பார்மோசா ஜலசந்திப் பகுதியில் உள்ள மிக மிக ஆபத்தான நிலைமைக்கு, சீனாவின் புராதனப் பகுதியாகிய தைவான், பெங்கு தீவுகளை அமெரிக்கா தன் ராணுவப் படைகளின் உதவிகொண்டு பிடித்து வைத்திருப்பதே காரணம்.

"மேலும் அத்தீவுகளைத் தொடர்ந்து ஆக்ரமித்து வருவதுடன், சீன மக்களின் துரோகியாகிய சியாங் கே-ஷேக்குக்கு உதவி அளிப்பதாகக் கூறி, அமெரிக்கா தன் ஆக்ரமிப்பை மறைக்க முயற்சிக்கிறது.

"மேலும் தன் ஆக்ரமிப்பை சீனக் கரையோரத் தீவுகளுக்கும் விஸ்தரிக்க முயற்சி செய்கிறது" என்றும் குருஷ்சேவ் கூறினார்.

தூரக்கிழக்குப் பகுதியில் ஏதோ ஒரு உலகப் போலீஸ்காரனின் வேலைகளைச் செய்ய அமெரிக்கா முயற்சித்து வருகிறது.

அமெரிக்க சர்க்கார் தைவான் விடுதலையடைவதைத் தடுக்க முயற்சித்து வருகிறது. சியாங்கே ஷேக்கின் ஆட்கள் குந்திக் கொண்டுள்ள சீனக் கரையோரத் தீவுகளை விடுதலை செய்வதற்காக சீன மக்கள் குடியரசு எடுத்து வரும் சட்டபூர்வ நடவடிக்கைகளையும் தடுத்துவருகிறது, என்றும் குருஷ்சேவ் கூறியுள்ளார்.

## "வாழிய செந்தமிழ், வாழ்க நற்றமிழர்"

### பாரதி விழாவிற்கு சென்னை கலைஞர்கள் பவனி

**30 கார்களில் புறப்பட்டனர்**

வாழிய செந்தமிழ், வாழ்க நற்றமிழர்,
வாழிய பாரத மணித் திருநாடு

என்ற பாரதியின் மணிவாசகங்கள் பொறிக்கப்பட்ட, பாரதியின் அழகிய திருவுருவப் படம் மலர்மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட கார் முன்னே செல்ல, கவிச்சக்கரவர்த்தியின் பாடல்களைப் பாடிக்கொண்டு, எட்டயபுரம் பாரதி விழாவுக்கு, தமிழகத்தின் தலைநகராம் சென்னை மாநகரிலிருந்து கலைஞர்களும் தமிழகத்தின் தலைவர்களும் இன்று காலை புறப்பட்ட காட்சி, காணரும் காட்சியாக இருந்தது.

சென்னை, செப். 9—

இந்த விழா ஏற்பாடுகளைக் கவனிக்க முன்னரே கலைஞர்கள் டி. என். சிவதாணுவும், பொன்னுசாமிபிள்ளையும் எட்டையபுரத்தில் தங்கி விழாவின் ஏற்பாடுகளைக் கவனிக்கின்றனர்.

ம.பொ.சி., டி. கே. ஷண்முகம் ஆகிய இருவரும் முன்னே சென்றுள்ளனர்.

இன்று காலை 30 கார்கள் திரு ஏ. பி. நாகராசன் இல்லத்திலிருந்து 7 மணிக்கு கிளம்பின.

ஜனசக்தி ஆசிரியர் ப. ஜீவானந்தம், சிவாஜி கணேசன், அவரது அண்ணன் தங்கவேலு, ஏ. பி நாகராசன், எஸ். டி. சுந்தரம், எம். ஏ. வேணு, டி. கே. பகவதி, சகஸ்ரநாமம், சாரங்கபாணி, எம். ஆர். ராதா, டி. ஆர். ராமச்சந்திரன், வி. கே. ராமசாமி ஸ்ரீராம், சாயிராம் ஆகிய பல கலைஞர்களின்கார்கள் வரிசையாக சென்ற காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. பாரதியின் சக்தியே சக்தி! கலைஞர்கள், இலக்கியத்துறைப் பெரியார்கள் பாரதி விழாவைக் கொண்டாட எட்டையபுரம் செல்லும் காட்சி ஒரு திருவிழாக் காட்சியாகவே இருந்தது.

இன்று மத்தியானம் திருச்சியில் சிவாஜி கணேசன் இல்லத்தில் உணவருந்திவிட்டு, மாலை மதுரையிலும், இரவு விருதுநகரிலும் தங்கிகோவில்பட்டி செல்கின்றனர். (ந.வி.)

### எதிர்க் கட்சிகளை அழைத்துச் சர்ச்சை

ஜெயப்பூர், செப். 8—

ராஜஸ்தான் சர்க்கார் முதலமைச்சர் மோகன் லால் சுகாதியா ராஜ்யத்திலுள்ள உணவு நிலை பற்றி சர்ச்சை செய்ய எதிர்க் கட்சியினரை அழைத்துப் பேசுவார். இத்தகைய சர்வகட்சிக் கூட்டம் செப். 11ந் தேதி நடைபெறும் எனத் தெரிகிறது

### பஞ்சாலை சம்பளக் கமிட்டி

**செப். 23-ல் ஆரம்பம்**

சென்னை, செப். 9—

பஞ்சாலைத் தொழிலாளர் சம்பளக் கமிட்டியின் விசாரணை செப். 23-ல் சென்னையில் ஆரம்பமாகிறது. அக்கமிட்டியின் முன்னால், அன்றே, தமிழ்நாடு தொழிற்சங்கக் காங்கிரஸ் சார்பில் சாட்சியம் அளிக்கப்படும்

ஆகவே பஞ்சாலைத் தொழிற்சங்கப் பிரதிநிதிகள் கூட்டம் 21-9-58-ல் சென்னையில் நடைபெறும். எல்லா பஞ்சாலைத் தொழிசங்கப் பிரதிநிதிகளும் தங்கள் பிராந்தியத்திலுள்ள மில்களைப் பற்றிய தஸ்தாவேஜுகள், புள்ளி விபரங்களுடன் வரும்படி, தமிழ்நாடு தொழிற்சங்கக் காங்கிரஸ் செயலாளர் திரு. டி. ஆர். கணேசன் கோருகிறார்.

### இலங்கை-துருக்கி ராஜிய உறவு

கொழும்பு, செப். 8—

தூதர்களை நியமித்து ராஜீய உறவு ஏற்படுத்திக்கொள்ள இலங்கையும் துருக்கியும் முடிவு செய்துவிட்டன.

## விற்பனையாகாமல் மிச்சப்படும் அரிசியை கேரள ராஜ்யத்துக்கு அனுப்புகிறோம்

### உ. பி., பீகார், வங்க வரட்சிதான் இங்கு அரிசி விலை ஏறக் காரணம்

**அமைச்சர் எம். பக்தவத்சலம் அறிக்கை**

சென்னை, செப். 9—

சென்னை ராஜ்யத்தில் உணவு நிலைமை மிகவும் திருப்திகரமாக இருக்கிறது. கேரளத்துக்கு ஏற்றுமதி அதிக அளவில் இருந்தும்கூட, ஆந்திராவிலிருந்து இறக்குமதி சிறிய அளவே இருந்தும்கூட, நமது உணவு நிலைமை மிகவும் திருப்திகரமே.

இந்த திருப்திகர நிலைமைக்குக் காரணம், சென்ற வருடத்திலும் இந்த வருடத்திலும் நல்ல விளைச்சல் ஏற்பட்டிருக்கிறது, என்று உணவு அமைச்சர் திரு. எம். பக்தவத்சலம் நேற்றைய சட்டசபையில் கூறினார்.

நபருக்கு 16 அவுன்ஸ் வீதம் பார்த்கால், இன்று உற்பத்தியாகும் 46 லட்சம் டன் உணவு தானியங்கள் நமது முழு தேவையையும் பூர்த்தி செய்யாது. பற்றாக் குறையென்றுதான் கூறவேண்டும். ஆனாலும்[illegible]ள் 16 அவுன்ஸ் வீதம் வா[illegible] உபயோகிக்கவில்லை. சமீபத்தில் செய்த சர்வேயின்படி பார்த்ததில் 16 அவுன்ஸ் உபயோகிக்கவில்லையென்றும், 15·4, 15·3 (அதாவது 15½ அவுன்சுக்குசிறிதுகுறைவாக) உபயோகித்திருக்கிறார்களென்று தெரிய வந்தது. இதனால் ஏற்பட்ட உபரியிலிருந்துதான் கேரளத்துக்கு 2½ லட்சம் டன் அரிசி அனுப்பப்பட்டுள்ளது.

**10 சத விலை ஏற்றம்**

உணவு தானியங்களின் விலைவாசி உயர்ந்திருப்பது பற்றி அமைச்சர் குறிப்பிடுகையில், '1957 ஆகஸ்டு மாத விலையுடன் குறிப்பிட்டால், இப்போது, சராசரி மணங்குக்கு ரூ, 1.84 ஏறியிருக்கிறது. அதாவது 10 சதமானம் விலை கூடியுள்ளது. சாதாரணமாக, இந்தியாவிலேயே ஆந்திராவுக்கு அடுத்தபடியாக, குறைந்த விலையில் தானியம் விற்கப்படுவது சென்னை ராஜ்யத்தில்தான்.

**வட ராஜ்ய வரட்சியே விலை ஏறக் காரணம்**

இந்த விலை அதிகரிப்புக்குக் காரணம் என்ன? பொதுவாக வட இந்தியாவில் விலைகள் ஏறியதைப் பார்த்தால் இதைப் புரிந்து கொள்ளலாம். தென் மண்டலத்தில் உணவு உற்பத்தி திருப்திகரமாக உயர்ந்துகொண்டே போனாலுங்கூட, வடக்கத்திய ராஜ்யங்களான உத்தரப் பிரதேசம், பீகார், வங்காளம், போன்ற ராஜ்யங்களில் வரட்சி ஏற்பட்டதால் விலைவாசிகள் உயர்ந்தன.

சாதாரணமாகவே, செப்டம்பரிலிருந்து மார்ச்வரை அரிசி விலை ஓரளவு உயர்வது உண்டு. எனினும் அக்டோபரில் குறுவை அறுவடை ஆனதும் விலைகள் குறையலாம்.

**470 மலிவுக் கடை**

சென்னை ராஜ்யத்தில் இப்போது 470 மலிவுத் தானியக் கடைகள் இருக்கின்றன. இவற்றின்மூலம் வினியோகிக்க 18 ஆயிரம் டன் கோதுமை கொடுத்திருக்கிறோம். நெருக்கடிகள் ஏதாவது ஏற்பட்டால் அவற்றைச் சமாளிக்கவே இந்தக் கடைகளை வைத்திருக்கிறோம்.

கேரளத்துக்கு ஆண்டுதோறும் 2 அல்லது 2½ லக்ஷம் டன் அரிசி தமிழ் நாட்டிலிருந்து போகிறது. ஆந்திராவிலிருந்து 1954ம் ஆண்டில் 1 லக்ஷத்து 12 அயிரம் டன் வந்தது. அது குறைந்துகொண்டே வந்து இப்போது 10 ஆயிரம் டனாக ஆகிவிட்டது.

## சுண்டைக் காய் கால்பணம் சுமை கூலி முக்கால் பணம்!

### அந்நியச் செலாவணி பெற ரூ. 3¼ கோடி நஷ்டமடைவதா?

**சர்க்கரை ஏற்றுமதி கொள்கைக்கு ராஜ்ய சபையில் கண்டனம்**

புதுடில்லி, செப். 8—

அந்நியச் செலாவணி பெறுவதற்காக இந்தியாவிலிருந்து சர்க்கரை ஏற்றுமதி செய்யப்படுவதற்கு சர்க்கார் திட்டமிட்டிருப்பது பற்றியும் இதன் பின்னணியிலுள்ள கொள்கை பற்றியும் ராஜ்ய சபையில் கடுமையான கண்டனம் எழுந்தது.

கம்யூனிஸ்ட் உறுப்பினர் என். பிரசாதராவ் பேசுகையில் மூன்றே கால் கோடி ரூபாய் நஷ்டப்பட்டுக் கொண்டு, இரண்டரை கோடி ரூபாய் அந்நியச் செலாவணி பெறுவதற்காக சர்க்கரை ஏற்றுமதி செய்வது வீம்புக்குச் செய்யும் வேலையாக இருக்கிறது என்று கண்டித்தார். சர்க்கரை ஆலை முதலாளிகள் இதனால் பயனடைவார்களேயன்றி மக்களுக்கு லாபமில்லை என்றார்.

சர்க்கரை உற்பத்திச் செலவைக் குறைக்க வேண்டும் என்று பலர் வலியுறுத்தினார்கள். முன்னாள் ரெவின்யூ மந்திரி எம். சி. ஷா பேசுகையில் 50 ஆயிரம் டன் சர்க்கரை ஏற்றுமதியாவதால், உள்நாட்டில் சர்க்கரை வாங்குவோர், 1 கோடி 40 லட்சம் ரூபாய் அதிக விலை கொடுக்க நேரிடுகிறது. சர்க்காருக்கு 1 கோடி 80 லட்சம் நஷ்டமாகிறது என்றார்.

## திருச்சியில் 20000 பீடித் தொழிலாளரின் 4ம் நாள் அறப்போர்

### பொதுமக்களின் ஆதரவு பெருகிவருகிறது

திருச்சி, செப். 9—

20,000 பீடித் தொழிலாளரின் அறப்போரின் 3-வது நாள் 7-9-58 அன்று அமைதியாக நடந்தது. பீடிக் கிடங்குகளிலிருந்து பீடிக் கட்டுகள் வெளியே போகவுமில்லை, உள்ளே செல்லவுமில்லை. மறியலுக்கும், கைதாவதற்கும் தயாராக 100க் கணக்கான தொண்டர்கள் அமைதியான முறையில் எல்லா பீடிக் கிடங்குகள் முன்னிலையிலும் கோஷமிட்ட வண்ணம் மறியல் செய்தார்கள்.

7-9-58 காலை தூத்துக்குடி எக்ஸ்பிரசில் திருச்சி வந்துசேர்ந்த சங்கத் தலைவர் திரு. எம். கல்யாணசுந்தரம், எம்.எல்.ஏ. ஒவ்வொரு பிரதேசத்திற்கும் சென்று நிலைமையைக்கவனித்தார். தொண்டர்கள் அமைதியான முறையில் மறியல் செய்யவேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார். பிறபகல் ஜில்லா கலெக்டர், டிபுடி கலெக்டர், போலீஸ் அதிகாரிகள் ஆகியவர்களைச் சந்தித்து தொழிலாளர் கோரிக்கை பற்றியும், நிலைமை பற்றியும் எடுத்துக் கூறினார்.

மாலை குருவியன்குளம் மைதானத்தில் 10,000த்திற்கதிகமானவர்கள் கலந்துகொண்ட பொதுக் கூட்டம் நடைபெற்றது. கூட்டம் என். பாவுதின் தலைமையில் நடைபெற்றது. திருச்சி நகரத்தின் சரித்திரத்திலேயே முதன் முதலாக 200க்கு மேற்பட்ட கோஷா பெண்கள் கூட்டத்தில் கலந்து கொண்டனர். கூட்டத்தில் தோழர்கள் எம். ஹக்கீம், எம். பனேஜான், பொன்மலை பாப்பா, ஆர். உமாநாத் ஆகியவர்கள் போராட்டத்தின் நிலைமை பற்றியும் பொது மக்கள் ஆதரவு பெருகி வருவதையும் எடுத்துக் கூறி, இப்போராட்டம் நிச்சயம் வெற்றி அடையும் என்பதையும் எடுத்துரைத்தனர். தோழர் உமாநாத் போட்டிச் சங்கத்தின் 'வெற்றுக் கூடை' ஊர்வலத்தையும் போராட்டத்தை உடைக்க எண்ணம் கொண்டு அவர்கள் நோட்டீஸ் போட்டிருப்பதன் உள் அர்த்தத்தையும் எடுத்துக் கூறி, போட்டிச் சங்கத்தினர் எவ்விதம் முதலாளிகளுக்கு அடியாள் வேலை செய்கின்றனர் என்பதையும் எடுத்துக் கூறினார்.

பிறகு பேசிய சங்கத் தலைவர் தோழர் எம். கல்யாணசுந்தரம் (எம். எல். ஏ), போராட்டம் அமைதியாக சாத்விகமான முறையில் நடைபெறுவதைப் பாராட்டி தொழிலாளர் தங்களது உடும்புப் போன்ற ஒற்றுமையை இறுதி வெற்றிபெறும் வரையில் விடாப்பிடியாக, எந்தவிதமான ஆத்திரமூட்டலுக்கும் இரையாகாமல் நடக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார். இப்போராட்டம் பீடி முதலாளிகளுக்கும், தொழிலாளருக்கும் நடைபெறும் போராட்டம். எனவே, இதில் போலீஸ் தலையிடவேண்டாம். நடுநிலைமை வகிக்கவேண்டும் எனக் கேட்டுக்கொண்டார்.

கூட்டத்தில் இன்று 4-ம் நாள் போராட்டத்திற்கு உதவுவதற்குத் தயாராக உள்ள பொது மக்கள் நன்கொடை பற்றிய பட்டியலும் கூட்டத்தில் படிக்கப்பட்டது.

## ஆமதாபாத் அறப்போர்: 23-ம்நாள் நிகழ்ச்சி

### 32 பெண் சத்தியாக்கிரஹிகள் தடைமீறினர்

**உச்சி வெயிலில் உருக்கமான காட்சி**

ஆமதாபாத், செப். 8—

மகாகுஜராத் ஜனதா பரிஷத்தைச்சேர்ந்த 66 சத்தியாக்கிரஹிகள் தடையுத்தரவு, ஊரடங்குச் சட்டம் இவற்றை மீறினர். கடந்த 23 நாட்களில் இன்று அனுப்பப்பட்ட சத்தியாக்கிரஹிகளின் எண்ணிக்கைதான் மிகவும் அதிகம். அவர்கள் நான்குபேர் வீதம் பிரிந்து ஊரடங்குச்சட்டம் அமுலிலிருந்த பகுதிக்குள் பிரவேசித்தனர். இவர்களில் 32 பேர் பெண்கள் என்பது குறிப்பிடத்தகுந்தது. இன்று சத்தியாக்கிரஹம் நடைபெற்ற இடம் காங்கிரஸ் மாளிகையை யொட்டிய பகுதியாகும்.

பெண் சத்தியாக்கிரஹிகள் நடுப்பகலில் கீதையிலிருந்தும், பிற பக்தி நூல்களிலிருந்தும் பஜனைப்பாடல்களைப் பாடத்தொடங்கிவிட்டனர். கடும் வெயிலில் அமர்ந்திருந்த பெண் தொண்டர்களுக்குக் குழந்தைகளும் பெண்களும் குடங்களில் தண்ணீர் கொண்டுவந்து தந்த காட்சி மிகவும் உருக்கமாக இருந்தது. அவ்விதம் தண்ணீர் கொண்டுவந்து தர முயன்ற தொண்டர் ஒருவர் போலீஸாரால் அழைத்துச் செல்லப்பட்டார்.

கைது செய்யப்படுவதுவரை தடையுத்தரவு அமுலிலிருக்கும் பகுதியில் தொண்டர்கள் இருப்பர் என்று பரிஷத் அறிவித்துள்ளது. காங்கிரஸ் மாளிகையிலிருந்து சுற்றிலும் நூறு அடி தூரம் வரை யாரும் நடமாடக் கூடாது என்று தடை விதிக்கப்பட்டிருந்தது. மாலை 5 மணி வரை பெரும்பான்மையான இடங்களில் அமுலிலிருந்த 22 மணி நேரத் தடையுத்தரவை அதிகாரிகள் நீக்கிவிட்டனர். (பி. டி. ஐ.)

### பாகிஸ்தானில் விசாரணையின்றிக் காவல்

**சட்ட ஆயுள் நீடிப்பு**

கராச்சி, செப். 8—

பாகிஸ்தான் பாதுகாப்புச் சட்டத்தின் ஆயுளை பாகிஸ்தான் தேசிய அசெம்பிளி இன்று 1959 ஜூன் 30 வரை நீடித்தது. விசாரணையில்லாமல் நபர்களைக் காவலில் வைப்பதற்கு இந்த சட்டம் வகை செய்கிறது.

## பட்டப்பகலில் கோடம்பாக்கத்தில் துணிகரக் கொள்ளை!

சென்னை, செப். 9—

பட்டப்பகலில் தலைநகரின் மத்தியில் மின்சார ரயிலில் வந்த 300 பேரை கொள்ளை யடிக்க நடந்த சம்பவம் நேற்று சென்னையில் நடந்துள்ளது. உடமைக்கும் உயிருக்கும் இந்த ஆட்சியில் பாதுகாப்பு இன்றி அந்த 300 பேரும் சுமார் ஒரு மணி நேரம் 12 கொள்ளைக்காரர்களிடம் சிக்கித் தவியாய்த் தவித்தனர்.

தாக்கியவர்களில் ஒருவர்தான் கைது செய்யப்பட்டுள்ளார்.

இந்த சம்பவம் கோடம்பாக்கம் ரயில்வே நிலையத்தில் நடந்தது நேற்று மாலை 1-30க்கு நடந்தது. மேற்கூறிய 12 பேரும் கத்தி அரிவாள்களுடன் ரயில் நிலையத்தில் நின்ற வண்டியைத் தாக்கினர், பிரயாணிகளின் பொருள்களை அபகரித்தனர். போன் செய்ய முன்வந்த ஸ்டேஷன் மாஸ்டரையும் குத்தினர்.

### சீனாவுக்கு அரபு நாடுகளின் தொண்டர்கள்

கெய்ரோ, செப். 8—

கடந்த மூன்று நாட்களாக இங்கு பத்திரிகைகள் தூரக் கிழக்கு நெருக்கடி நிலைமைக்கு அதிக முக்யத்துவம் கொடுத்து வருகின்றன. பார்மோசா சீனாவுக்குச் சேர்ந்ததே என்றும், இப்பிரச்சினையில் அரபு நாடுகளின் தார்மீக ஆதரவு சீனாவுக்கு உண்டென்றும், அவசியப்பட்டால் மக்கள் சீனாவின் பக்கம் சேர்ந்து போராடுவதற்குத் தொண்டர்களை அனுப்பவும் தயார் என்றும் அராபியப் பத்திரிகைகள் எழுதி வருகின்றன. (பி. டி. ஐ.)

ஜனசக்தி

சென்னை 10-9-1958

# எரிகிற நெருப்பில் எண்ணை ஊற்றும் வேலை

கேரளத்திற்கு காங்கிரஸ் தலைவர் திரு. தேபர் எதற்காக வந்திருக்கிறார் என்று யாருக்காவது இன்னும் சந்தேகமிருந்தால், அதற்கிடமில்லாது பல கூட்டங்களில் அவர் திருவாய் மலர்ந்தருளியிருக்கிறார்.

"ஒன்றுமறியாத பல மக்கள் தவறான வழியில் இழுத்துச் செல்லப்பட்டு பலாத்காரச் செய்கைகளுக்குத் தூண்டப்பட்டிருக்கிறார்கள். அமைதி குலைந்த சூழ்நிலை இங்கு நிலவுகிறது" என்று திருச்சூருக்கருகில் ஒரு கூட்டத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

நாம் கேட்கிறோம், சமீபத்தில் கம்யூனிஸ்டு சர்க்காரை எம்முறையிலாயினும் ஒழித்துக்கட்டி விட்டே மற்ற வேலைகளை கவனிப்போம் என்று பறைசாற்றி வரும் தலைவர்கள் எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்கள்? பலாத்காரத்திற்குத்தான் கம்யூனிஸ்ட் அரசாங்கம் செவி சாய்க்கும் என்று எழுதிய கத்தோலிக்க மதசார்புள்ள பத்திரிகையின் அறைகூவலைப்பற்றி திரு. தேபர் அவர்களின் அபிப்பிராயமென்ன? கேரளக் கல்வி மந்திரி திரு முண்டசேரி அவர்களைக் கொல்லுவதற்கு முயற்சி நடந்தது யாருடைய தூண்டுகோலால்? இன்னொரு கேரள மந்திரியான திரு. மஜீத் அவர்களின் காரை வளைத்துக்கொண்டு கல்லால் "அடித்த அஹிம்சா மூர்த்தி"கள் யார்? திரு. ஈ. எம். எஸ். அவர்களையும் திரு டி. வி. தாமஸ் அவர்களையும் மனிதன் உச்சரிக்கக்கூட வெட்கப்படவேண்டிய வார்த்தைகளைத் தெருத் தெருவாய் கோஷித்துக்கொண்டு மக்களுக்கு ஆத்திர மூட்டித் திரியும் படைகள் யாருடைய படைகள்? ஒரு சந்தனத்தோப்பு சம்பவம் மட்டுமல்ல 200 இடங்களில் துப்பாக்கிப் பிரயோகம் நடைபெற நிர்ப்பந்தம் கொடுப்போம் என்று வெறிக் கூச்சல் போடும் தலைவர்கள் யார்? திண்ணையில படுத்துத் தூங்கிய ஒரு விவசாய சங்கத் தலைவரைப் படுகொலை செய்த சண்டாளர்கள் யார்? சென்ற வாரம் காசர்கோடு தாலுகாவில் விவசாய சங்கத் தலைவர் சுந்தர ஷெட்டியை சுட்டுக் கொல்வதற்கு ஊக்கமளித்த தீய சக்திகள் எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்கள்?

கேரளத்தில் அமைதியின்மையைப் பற்றி தாராளமாகப் பேசுவார் திரு, தேபர். ஆனால் அதற்குப் பிரதான பொறுப்பாளியாக இருக்கும் அவருடைய கட்சியான காங்கிரஸ் கட்சியைப் பற்றி அவர் பேசமாட்டார்.

கேரள மக்கள் முன்புள்ள முக்கிய பிரச்சினை "வறுமையை ஒழிப்பது" என்று கண்டு பிடித்தார் இன்று திரு. தேபர். அண்மையில் நடந்த கேரள மாகாண காங்கிரஸ் மகாநாட்டில், கேரள மக்கள் முன்புள்ள முக்கிய பிரச்சினை கம்யூனிஸ்ட் சர்க்காரை ஒழித்துக் கட்டுவது என்று அவர் கூறியுள்ளதை அவர் மறந்திருக்கலாம், நாடு மறக்கவில்லை.

கேரள விஜயத்தில் அவர் உள்ளத்தில் இருக்கும் உண்மையான நோக்கத்தைப் பின்வருமாறு வெளியிட்டிருக்கிறார். திரு. தேபர் "..... கேரளத்தில் சமாதானமில்லை எனவே இங்கு சுபிட்ஷத்தை எதிர்பார்ப்பது அர்த்தமற்றது" எனக் கூறி கேரளத்தில் மீண்டும் சமாதானம் ஏற்படுமென்று தான் எதிர்பார்ப்பதையும், அதற்குப் பிறகு அபிவிருத்தி வேலைகளை மக்கள் மேற்கொள்ளுவார்களென்றும் சேர்த்துக் கொண்டார்.

ஆளும் கட்சியாக அதிகார பீடத்தில் அகில இந்தியாவில் இன்றிருக்கும் காங்கிரஸ் கட்சியின் பெரிய தலைவரல்லவா திரு தேபர்! அவர் இம்மாதிரி "சாமர்த்தியமாக"ப் பேசுவதாக நினைத்துத்தான் பேசுவார். ஆனால் மேற்கூறிய வார்த்தைகளின் அர்த்தம் என்ன? கம்யூனிஸ்ட் ஆட்சியில் கேரளத்தில் சமாதானம் இல்லை. அது தொலைய வேண்டும். காங்கிரஸ் ஆட்சி கொண்டுவரப்படும். அதற்குப் பிறகு அபிவிருத்தி வேலைகளை செய்யலாம். அதுவரை கம்யூனிஸ்ட் ஆட்சியைக் கவிழ்பதற்கு ஆவதனைத்தும் செய்யுங்கள். கேரள காங்கிரஸ்காரர்களும் அவர்களுடைய சகாக்களும் கம்யூனிஸ்ட் சர்க்காரை எதிர்க்கவேண்டுமென்பதற்கு தூபம் போடும் வேலையைத் தவிர வேறு என்ன இது. கேரள காங்கிரஸ் தலைவர்கள் இதுவரை கூறிவந்த அவதூறுகளுக்கு அதிகார பூர்வமான முத்திரை வழங்கத்தானே தேபரின் யாத்திரை?

நேற்று டெல்லியில் பத்திரிகை நிருபர்களுடன் பேசிய பண்டித நேருவும் தான் பிரதம மந்திரியல்ல, காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்தானென்றும் மீண்டுமொருமுறை நிரூபித்துக் கொண்டார், "அமைதியின்மை அங்கு இருக்கத்தான் செய்கிறது. அது யதார்த்த உண்மை. அதை யாரும் மறுக்க முடியாதென்று கூறிக் கொள்வதுடன் தனது கடமை நிறைவேறியதாகக் கருதினார். பண்டித நேருவை நாம் கேட்கிறோம், இந்த "அமைதியின்மை"க்குப் பொறுப்பாளி யார்? இது சங்கடமான கேள்வி. திட்டவட்டமாக அவர் அடிக்கடி பெருமை பேசிக்கொள்ளும் காங்கிரஸ் கட்சி யென்று கூறும் நேர்மை அவருக்கில்லாமலிருப்பது நாட்டின் துரதிர்ஷ்டமே!

மேலும் கூறுகிறார் கேளுங்கள் "அரசியல் கட்சிகளை இலக்காக வைத்து வேலை செய்தால் அது ஒரு புதிய நிலைமையை சிருஷ்டித்து விடுகிறது". இன்று காங்கிரஸ் தலைவர்களாலும் பிற்போக்கு காங்கிரஸ் தலைவர்களாலும் பிற்போக்கு சக்திகளாலும் இலக்காக வைத்து கேரளத்தில் தாக்கப்படும் கட்சி காங்கிரஸ் கட்சியா கம்யூனிஸ்ட் கட்சியா? ஏன் இதைப்பற்றி மௌனம் சாதிக்கிறார்? எரியும் நெருப்பில் எண்ணையை ஊற்றுவதைத் தவிர வேறு என்ன வேலையை மேற்கொள்ளுகிறார் பண்டித நேரு?

பூனை கண்ணை மூடிக்கொண்டு உலகமே அஸ்தமித்து விட்டதாக நினைத்ததாம். மலைபோல் மக்களுக்குத் தெரியும் உண்மையை பிரசார வசதிகளையும் அதிகார பலத்தையும் வைத்துக் கொண்டு மக்களிடமிருந்து மூடி மறைக்கப் பார்க்கிறார்கள் காங்கிரஸ் தலைவர்கள். ஆனால் "அஹிம்சை"யைப்பற்றி ஓயாமல் பேசிக்கொண்டு பலாத்காரத்தை இடைவிடாமல் தூண்டுவதற்கும், முழுப்பூசனிக்காயைச் சோற்றில் மறைப்பது மாதிரி மக்களை ஏமாற்றுவதற்காக அப்பட்டமான பொய்களைச் சொல்லுவதற்கும் காங்கிரஸ் தலைவர்கள் கொஞ்சம்கூடத் தயங்க மாட்டார்களென்று மக்கள் நாளுக்கு நாள் புரிந்து கொண்டு தான் வருகிறார்கள்.

கேரளத்தில் மக்களுக்கு ஏற்பட்டுவரும் முன்னேற்றத்தை மறைக்க அவதூறுகளைக் கிளப்பி கம்யூனிஸ்டுகளை எதிர்த்து எவ்வளவு துஷ்பிரசாரமும் தீய நடவடிக்கைகளும் காங்கிரஸ் தலைவர்கள் மேற்கொண்டாலும், ஜனநாயக சக்திகள் 'கேரள சர்க்கார் நீடூழி வாழ்க' என்று வானதிர மென்மேலும் கோஷித்து அணி திரளுமென்பது உறுதி.

## இது பலாத்காரம் அல்லவா?

தஞ்சை ஜில்லா, மாயவரம் தாலூகா மணல்மேடு ரேஞ்ஜில் வரதம்பட்டு ஒரு சிறிய கிராமம். தோழர் முத்தையன் என்ற கம்யூனிஸ்டு கட்சி உறுப்பினர் அங்கு விவசாய இயக்கத்தில், குறிப்பாக விவசாயத் தொழிலாளர்களுக்கு, பணியாற்றி வந்தவர். ஆகஸ்ட் 30-ந் தேதி தோழர் முத்தையன் படுகொலை செய்யப்பட்டார். அவர் தனது வீட்டில் சாப்பிட்டுவிட்டு எதிரிலிருந்த அவருடைய இன்னொரு வீட்டில் வழக்கம் போல் படுக்கச் சென்றபோது, தெருவில் சிலர் அவரைச் சுற்றி வளைத்துக் கொண்டு குத்திக் கொன்றார்கள் என்று தெரிகிறது.

தோழர் முத்தையன் விவசாய இயக்கத்திற்கு தலைமை தாங்குவதை நிலச்சுவான்தார்களும், கோவில் நிலங்களை மொத்தக் குத்தகைக்கு எடுத்துள்ள பெரும் புள்ளிகளும் அங்கு நிச்சயம் விரும்பவில்லை. தேர்தல் காலத்தில், கம்யூனிஸ்டு கட்சிக்காகத் தோழர் முத்தையன் உறுதியாக வேலைசெய்தது அங்கிருக்கும் காங்கிரஸ் பிரமுகர்களின் தீவிர விரோதத்தையும் பெற்றது, அவர்கள் கம்யூனிஸ்டு கட்சியை விடாது எதிர்க்கவும் செய்தார்கள். பழைய கால முறைப்படி கிராமங்களில் ஏழை எளிய மக்கள் மீது ஆதிக்கம் செலுத்தி வந்த சிறு பகுதியினருக்கு தோழர் முத்தையன் இருப்பதே பெரிய சங்கடமாயிருந்ததென்றும் கூறலாம்.

தோழர் முத்தையன் கொலையுண்ட தினத்தில்தான் அந்த கிராமத்தில் பஞ்சாயத்து போர்டு தலைவர் தேர்தல் நடந்தது. ஸ்தல காங்கிரஸ் பிரமுகர்களின் ஆதரவிருந்ததாகக் கூறப்படும் நபர் தோல்வியடைந்ததென்று தெரிகிறது. வெற்றிபெற்ற நபருக்கு தோழர் முத்தையன் முயற்சியால் ஆதரவு கிடைத்ததென்று தோல்வியடைந்த பகுதியினருக்கு ஆத்திரம் மூட்டப்பட்டதென்றும் சொல்லப்படுகிறது. தேர்தல் நடந்த சமயத்தில் தோழர் முத்தையன் கிராமத்தில் இல்லை. ஆனால் அன்றிரவு அவர் வீடு திரும்பியவுடன் மேற்கூறியவாறு படுகொலை செய்யப்பட்டிருக்கிறார். போலீஸ் புலன் விசாரணை நடந்து வருகிறதென்று தெரிகிறது.

தஞ்சை ஜில்லாவில்நடந்துள்ள இந்தசம்பவம் சிறிய விஷயமல்ல. மக்களுக்காகத் தொண்டு செய்யும் ஒரு ஊழியரை நடுத்தெருவில் கொல்லுவதற்கு சிலருக்கு எவ்வாறு தைரியம் ஏற்பட்டது? விரோத குரோதங்களைக் கத்தி முனையில் தீர்த்துக் கொள்ளும் இப்போக்கை தமிழ் மக்கள் நிச்சயம் வன்மையாகக் கண்டிப்பதோடு இந்த முறைகளைப் பின்பற்றுபவர்களை சும்மாவிடமாட்டார்கள. காங்கிரஸ் ஆட்சியில் தமிழ்நாட்டில் நடந்துள்ள இந்தக் கொடுமையை எதிர்த்துத் தமிழ் மக்கள் நிச்சயம் குரலெழுப்புவார்கள். உயிருக்குப் பாதுகாப்பற்ற இந்த நிலைமை நமது கிராமங்களில் உலவினால், தடியெடுத்தவன் தண்டல்காரன் என்று படுகொலையும், பகிரங்கமாக நடந்தால் 'சட்டம்அமைதி' என்று காங்கிரஸ் ஆட்சியாளர் பேசுவதெல்லாம் வெறும் கேலிக்கூத்தாகும்.

கேரளத்தில் அமைதியின்மையும் பலாத்காரமும் தாண்டவமாடுகிறதென்று ஓயாமல் பறைசாற்றும் காங்கிரஸ் சர்க்காரையும், காங்கிரஸ் கட்சித் தலைவர்களையும் வரதம்பட்டு சம்பவம்பற்றி உங்களுடைய பதில் என்னஎன்று கேட்கிறோம்? இந்தப் படுகொலை 'ஜனசக்தி'யைத் தவிர பல பத்திரிகைகளிலும் இருட்டடிப்புச் செய்யப்பட்டிருக்கிறது.

அரசியல் காரணங்களுக்காகத் தோழர் முத்தையன் பழிவாங்கப்பட்டாரோ என்று மக்கள் சந்தேகப்பட இதில் நிச்சயம் இடமுண்டு. குற்றமிழைத்தவர்கள் மீது உறுதியாக வழக்கு நடத்தப்பட்டு உரிய தண்டனை அளிக்கப்படவேண்டுமென மக்கள் வற்புறுத்துவார்களென்பது திண்ணம்.

## வாழ்க்கைச் செலவுப் புள்ளி வெளியூர்களில் உயர்வு

சென்னை, செப். 8—

விலைவாசிப்புள்ளிகள் வெளியூர்களைப் பொறுத்தவரை உயர்ந்த வண்ணம் இருக்கின்றன. கடலூரில் 22 புள்ளிகள் அதிகமாகி 411 ஆகவும், திருச்சியில் 10 புள்ளிகள் அதிகரித்து 377 ஆகவும், மதுரையில் 13 புள்ளி அதிகரிந்து 378 ஆகவும், 7 புள்ளிகள் அதிகரித்து கோவையில் 440 ஆகவும், 14 புள்ளிகள் அதிகரித்து நாகர் கோவிலில் 430 ஆகவும் உயர்ந்துள்ளன.

## உணவு நிலை பற்றி விவாதிக்க சர்வ கட்சிக் கூட்டம்

### செப். 11-ந் தேதி நடக்கும்

### பிரதமர் நேரு அறிவிப்பு

புதுடில்லி, செப். 8—

நாட்டின் உணவு நிலைபற்றி விவாதிப்பதற்காக பார்லிமெண்டில் பிரதிநிதித்துவமுள்ள சகல கட்சிகளையும் அழைத்து செப். 11-ந் தேதியன்று ஒரு கூட்டம் நடத்த சர்க்கார் முடிவு செய்திருக்கிறது என்று இன்று மக்கள் சபையில் பிரதமர் நேரு அறிவித்தார்.

சபாநாயகரின் ஆலோசனைப் படியே இந்த முடிவு எடுக்கப்பட்டது. இந்தக் கூட்டத்தில் 25 30 பார்லிமெண்ட் உறுப்பினர்கள் கலந்துகொள்வார்கள் என்று அவர் கூறினார்.

இந்தக் கூட்டம் செப். 11-ல் நடைபெற்ற பிறகும் உணவுப் பிரச்சினைபற்றி விவாதிக்கவேண்டும் என்று உறுப்பினர்கள் விரும்பினால், மக்கள் சபை விரும்பினால் சர்க்கார் தயாராக இருக்கிறது எனவும் நேரு கூறினார்.

மக்கள் சபையில் விவாதம் நடத்துவதற்கு எவ்விதத் தடங்கலும் இருப்பதாகயாரும் நினைக்க வேண்டாம். இத்தகைய உத்தேசம் கிஞ்சிற்றும் சர்க்காருக்கு இடையாது என்றார் அவர்.

(பி.டி.ஐ.)

## ஓட்டு மூலமே கம்யூனிஸம் வெற்றி பெற்றுவிடும்

### மைசூர் சபாநாயகர் பீதி

பெல்லாரி, செப். 8—

காங்கிரஸ்காரர்கள் தம்மிடையே உள்ள கோஷ்டிச் சண்டைகளைக் கைவிட்டு, நாடு முழுவதிலும் ஒன்று சேர்ந்து நின்று நிலையான ஆட்சி ஏற்பட ஆவன செய்யாவிட்டால் ஓட்டுமூலமே கம்யூனிஸ்ட் வெற்றி ஓங்கிவிடும் என்று மைசூர் சட்டசபை சபாநாயகர் எஸ். ஆர். காந்தி எச்சரித்தார்.

## லெபனானில் அமெரிக்கர் வாலாட்டமில்லை

### ஐ. நா. கோஷ்டியின் சாதனை

புதுடில்லி, செப். 8—

லெபனானில் அமெரிக்க கடற்படையினர் ஐ. நா. கண்காணிப்பு கோஷ்டியின் நடவடிக்கைகளில் தலையிடவில்லையென்றும் அமெரிக்கர் கரையோரமாக ஒதுங்கியிருந்து வருவதாகவும் பிரதமர் நேரு இன்று ராஜ்யசபையில் கேள்வி நேரத்தில் அறிவித்தார்.

லெபனானில் ஐ. நா. கண்காணிப்பு கோஷ்டியின் வேலையையும் பொறுப்பையும் விஸ்தரிப்பதற்கு எவ்வித ஆலோசனையும் இல்லை என்று உதவி அயல் நாட்டு மந்திரி திருமதி லக்ஷ்மி மேனன் கூறினார்.

லெபனானின் விவகாரங்களில் ஐக்கிய அரபுலீக் தலையிடவில்லையென்று ஐ. நா. கோஷ்டி தனது அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறதா என்று கேட்டதற்கு பிரதமர் நேரு பதிலளிக்கையில் "ஆயுதங்கள் அனுப்பப்படவில்லையென்று ஐ. நா, கண்காணிப்பாளர் தெரிவித்துள்ளனர். லெபனானில் அரபு லீக் தொண்டர்கள் பிரவேசிப்பதும் குறைந்துவிட்டதாம். முன்பு புகாருக்கு இடமிருந்திருக்கலாம். பின்னால் அதெல்லாம் தவிர்க்கப்பட்டது. என்றார்.

# பாரதியும் அறிவியலும்

[ஜீவா]

'உலகம் இன்பக் கேளி." இதை மனித உடல் தாங்கித் திரியும் ஆணும் பெண்ணும் தேவைக்குத் தகுந்தபடி அனுபவிக்க வேண்டும். மக்கள், சமவாய்ப்பும் சம உரிமையும் பெற்ற சகோதர, சகோதரிகளாக வாழ வேண்டும்.

இந்தப் பேருண்மையை இரண்டு வழிகளால் உணர்த்த வேண்டும். ஒன்று அறிவைத் தொட்டு உணர்த்தவேண்டும் மற்றொன்று உணர்ச்சியைத் தொட்டு உணர்த்த வேண்டும்.

மூளையைத் தொட்டுச் சொல்வதை 'வேதம்' என்கிறான் பாரதி.

"ஒன்று பரம்பொருள்
நாம் அதன் மக்கள்
உலகு இன்பக்கேளி என்றே
—மிக
நன்று பல்வேதம்
வரைந்தகை பாரத
நாயகி தன்திருக்கை"

என்று "பாரதமாதா"வைப் பற்றிப் பாரதி பாடும்பொழுது, 'வேதம்' பற்றிய தன் கருத்தை நுட்ப திட்பமாக வெளியிடுகிறான்.

உலகம் இன்பக்கேளியாக விளங்க வேண்டுமானால், மக்கள் வாழ்வு ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் திளைக்க வேண்டும். சமத்துவ—சகோதரத்துவ—சுதந்திரம், சதையும் மூச்சும் பெற்று நித்திய நடைமுறை வாழ்வில் உலவ வேண்டும்.

நாம் எல்லாம் 'ஒரு பொருளால்' ஆக்கப்பட்டவர்கள்— 'பரம்பொருள் ஒன்று நாம் அதன் மக்கள்'—என்ற உணர்ச்சி மேலோங்க மேலோங்கத்தான், உலகம் இன்பக்கேளியாக விளங்கும்.

இந்த உண்மையைக் கூறுவதே வேதம். பல பல கோணங்களிலிருந்து, பல பல நிலையில் நின்று, பல பல பாணியில் அறிவைத் தொடுபவைகள் யாவும் வேதங்கள் பாரதிக்கு.

இதயத்தை ஆனந்தக் கூத்தாட வைப்பது, நரம்பை முறுக்கேற்றி விடுவது, ஒளிவிளக்காக வழிகாட்டுவது இலக்கியம் என்கிறான்.

"தீஞ்சொற் கவிதையஞ்
சோலை—தனில்
தெய்வீக நன்மணம் வீசும்
தேஞ்சொரி மாமலர்
சூடி—மதுத்
தேக்கடிப்பள் எம் அன்னை"

என்று,

"வெறிகொண்ட தாய்" என்ற பாடலில் ஒரு அடி பாடுகிறான் பாரதி. சிறந்த இலக்கியம், அது, கவிதையோ, காப்பியமோ, கதை-கட்டுரையோ, உணர்ச்சியை என்ன செய்யும் என்பதை இங்குக் கோடிட்டுக் காட்டுகிறான்.

தீஞ் சொற்களும் தெய்வீக நன்மணமும் கவிதையஞ் சோலையை, இலக்கியப் பூங்காவை, அணி பெறச் செய்ய வேண்டும் என்கிறான். வடிவமும் உள்ளுறையும் (Form & Content) சொல்லழகும் கருத்தழகும் ஈடுஜோடாக இணைந்து நிற்க வேண்டும் என்கிறான். வடிவில் குறைவற்ற தாஜ்மகாலைப்போல், அந்த இலக்கியம் இதய வீணையை அற்புதமாக இயக்கி, இன்பக்கடல் ஆட்டுவிக்கும் என்கிறான்.

### வேத-சாத்திரங்கள்

பாரதி பழைய வேதங்களையே வேதம், வேதம் என்று கூறுகிறான் என்று, இன்றும் தப்பாகக் கருதப்படுகிறது.

'வேதம் புதுமை செய்' என்று அவன் வருங்கால வாழ்வுக்குப் 'புதிய ஆத்திச்சூடி' பாடியிருப்பதே போதும், அவன் 'வேதம்' என்று கூறுவதும் சாதாரணமாக 'வேதம்' என்று கூறுவதும் ஒன்றல்ல என்று புரிந்துகொள்வதற்கு,

அதோடு, "வருகின்ற பாரதத்தை வாழ்த்துகின்ற" பாடலில்,

"மெய்மை கொண்ட
நூலையே அன்போடு
வேதம் என்று
போற்றுவாய் வா வா வா"

என்று அழைப்பதில் அவன் 'வேதம்' என்ற சொல்லுக்குப் பொருள் கூறுவதையும் சிந்திக்க வேண்டும்.

"பாஞ்சாலி சபதத்தில்" கலைமகளைப் படம் பிடிக்கிறான். அதில்,

"வேதத் திருவிழியாள்" என்று பாடுகிறான். 'கலைமகளின் கண், வேதம்'. சிந்தனை விருந்தல்லவா?

"கண்ணன் பாட்டில்,"

'கண்ணன்—என் தந்தை'

என்ற பகுதியில்,

"வேதங்கள் கோத்து
வைத்தான்—அந்த
வேதங்கள் மனிதர்தம்
மொழியில் இல்லை;
வேதங்கள் என்று
புவியோர்—சொல்லும்
வெறுங்கதைத் திரளில் அவ்
வேதம் இல்லை;
வேதங்கள் என்ற வற்
றுள்ளே—அவன்
வேதத்தில் சில சில
கலந்த துண்டு;
வேதங்கள் அன்றி
ஒன்றில்லை—இந்த
மேதினி மாந்தர் சொலும்
வார்த்தைகள் எல்லாம்."

இந்த அடிகளைப் படித்தால் பாரதி சொல்லும் வேதங்கள், இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்று சாதாரணமாகச் சொல்லப்படுகிற நான்கு வேதங்கள் அல்ல என்பது உள்ளங்கை நெல்லிக் கனிபோல் விளங்கும்.

விரிந்த பரந்த இந்தப் பிரபஞ்சம் முழுவதையும் அமுதமாக நுகரும் வாழ்வுதான் 'வேத' வாழ்வு என்று வேறொரு இடத்தில், பாரதி குறிப்பிடுவதும் சிந்திக்கத் தக்கது.

'உயிர்பெற்ற தமிழர்' பாட்டில் 'வேதம்' என்றுதான் அர்த்தப் படுத்துவதைத் தெட்டத்தெளிவாகச் சொல்கிறான்:

"உண்மையின் பேர் தெய்வம்
என்போம்—அன்றி
ஓதிடும் தெய்வங்கள்
பொய்யெனக் கண்டோம்
உண்மைகள் வேதங்கள்
என்போம்—பிறிது
உள்ள மறைகள்
கதையெனக் கண்டோம்"

என்று பாடுகிறான்.

ஆகவே, பாரதி 'வேதம்'என்று சொல்வதை பழைய நான்கு வேதங்கள் என்று பொருள் கொள்வதோ, அவ்வாறு பொருள்கொண்டு, பாரதியைப் பிற்போக்காளன் என்று கூறுவதோ தவறு. பாரதி இலக்கியம் முழுவதிலும் ஒட்டு மொத்தமாகக் கண்ணெறிந்து, அவன் கூறும் வேதத்தின் புதுக் கருத்தைத் தேர்ந்து தெளிதல் வேண்டும்.

பாரதி பழைய வேதத்தில் மூழ்கிவிடவில்லை. ஆனால் அதன் சாரத்தை எடுக்கிறான், புதிய வேதம் செய்கிறான். அது வாழ்வுக்கு வழிகாட்டும் வேதம்.

"பல்லாயிரம் வேதம் அறிவு ஒன்று", "வேடம் பல்கோடி ஓர் உண்மைக்குள் என்று வேதம் புகன்றிடும்," கவலை துறந்திங்கு வாழ்வதே வீடு என்று காட்டும் மறைகள் எல்லாம்" என்றும், 'வேதம் என்றும் வாழ்க' என்றும் அவன் பாடியிருப்பவைகள், வேதத்தைப் பற்றிய பாரதியின் கருத்தை யறிய மிக மிகச் சிந்திக்க உதவும்.

### சாத்திரங்கள்

"சாத்திரம் பல பேசும் சழக்கர்காள்" என்கிறார் நாவுக்கரசர். "சாத்திரச் சந்தடிகளிலே" என்கிறார் இராமலிங்க வள்ளல்.

பாரதி 'சாத்திரம்' பற்றி என்ன சொல்கிறான்?

"கண்ணன்—என் தாய்" என்ற பாட்டில்,

"சாத்திரம் கோடி
வைத்தாள்—அவை
தம்மினும் உயர்ந்ததோர்
ஞானம் வைத்தாள்"

என்று பாடுகிறான்.

சாத்திரத்தை விட அறிவு—பகுத்தறிவுதான் பெரிது. சாத்திரத்தை அறிவு பயன்படுத்திக் கொள்ளவேண்டும். சாத்திரம், அறிவைக் கட்டுப்படுத்த அல்லது தடைப்படுத்தக் கூடவே கூடாது. இது பாரதியின் கருத்து.

"சாத்திரங்களை"ப் பற்றி பாரதியின் இன்னொரு கருத்தைக் கேளுங்கள்,

"சாத்திரங்கள் பல
தேடினேன்—அங்கு
சங்கை யில்லாதன
சங்கையாம்—பழங்
கோத்திரங்கள் சொல்லும்
மூடர்தம்—பொய்மைக்
கூடையில் உண்மை
கிடைக்குமோ?"

என்று "கண்ணன்—என் சற்குரு" என்ற பாட்டில் பாடுகிறான். சாத்திரங்கள் குழப்படிக் குட்டைகள் என்றும் அவற்றைப் படித்தால் சந்தேகம் இல்லாதன சந்தேகம் ஆகும் என்றும் அவை மூடர்களின் பொய்மைப் பொருவிளங்காய்கள் நிறைந்த கூடைகளென்றும் கூறுகிறான்.

இன்னும் கேளுங்கள்:

"சூத்திரனுக்கொரு நீதி
—தண்டச்
சோறுண்ணும் பார்ப்புக்கு
வேறொரு நீதி;
சாத்திரம் சொல்லிடு
மாயின்—அது
சாத்திரம் அன்று
சதியென்று கண்டோம்"

இவ்வாறு, "உயிர்பெற்ற தமிழர்" பாட்டில் பாடி, நாம் சாத்திரத்தை எவ்வாறு நடத்த வேண்டும் என்பதை எடுத்துக் காட்டுகிறான்.

### புராணங்கள்—ஸ்மிருதிகள்

புராணங்களைப்பற்றியும் ஸ்மிருதிகளைப்பற்றியும் பாரதி சில பல வரையறுப்புகள் காட்டுகிறான்.

அநுமன் கதை, வீமன் கதை, அகத்தியன்கதை ஆகிய புராண இதிகாசக் கதைகளெல்லாம் புளுகுணிக் கதைகள். புராணங்கள் ஒன்றையொன்று பொய் என்று பழிக்கும். ஆனால் அவற்றைப் படைத்தவர்கள், நல்ல கவிதைகளையும் படைத்திருக்கிறார்கள் இவ்வாறு கூறிவிட்டு, பாரதி தனதுமதிப்பீட்டைக் கூறுகிறான்.

"கவிதை மிக நல்ல
தேனும்—அக்
கதைகள் பொய்யென்று
தெளிவுறக் கண்டோம்;
புவிதனில் வாழ்நெறி
காட்டி—நன்மை
போதிக்கும் கட்டுக்
கதைகள் அவைதாம்."

கட்டுக் கதைகள்மூலம் "வாழ வழி"போதிக்கின்றன என்கிறான். வாழும் வழிதான் பாரதியின் கவலை. எனவே "நன்மை போதிக்கின்றன" என்கிறான்.

ஸ்மிருதிகளை, பாரதி, "மாறி மாறிப் பயிலும் இயல்பின" என்கிறான். எனவே, அவைகளைப் பேணுகிறவர்களும் இல்லை என்கிறான்.

பாரதி காலத்தையும் நூல்களையும் இணைத்துச் சொல்லும் கருத்து, நமது நெஞ்சில் என்றும் நின்று நிலவத்தக்கது.

"காலத்திற்கேற்ற
வகைகள்—அவ்வக்
காலத்திற்கேற்ற
ஒழுக்கமும் நூலும்
ஞால முழுமைக்கும்
ஒன்றாய்—எந்த
நாளும் நிலைத்திடும்
நூல் ஒன்றும் இல்லை."

'புத்துயிர் பெற்ற புதிய தமிழன்' பாரதி உருவில் நின்று இவ்வாறுபாடுகிறான். இந்தக் கருத்தில் விஞ்ஞானப் பார்வை ஒளிவிட்டு கமகமப்பதை, நவீனக் கண் படைத்த யாரும் எளிதில் காண முடியும்.

# ஆசிரியருக்குக் கடிதங்கள்

## தி. மு. கழகமும் தீ விபத்து நிவாரணமும்

ஐயா,

சென்னை, புளியாந்தோப்பு, டிமெலஸ் ரோடிலுள்ள கெனால் பகுதியில் (4-9-58) வியாழன் அன்று தீப்பிடித்து அதனால் சுமார் 3000க்கு மேற்பட்ட ஏழை மக்கள் வீடுகளை இழந்தனர்.

அன்றிரவு உடனடி நிவாரணமளிக்க ஓர் சர்வ கட்சிக் கூட்டம் கூட்டினர். இதில் காங்கிரஸ் சார்பாக திரு. என். ஜெகதீசனும், ஜி. பழனிவேலும், புளியாந்தோப்பு, கம்யூனிஸ்டு கட்சி சார்பாக தோழர். டி. கன்னையாவும் கெனால் பகுதி குடிசை வாழ்வோர் சார்பாக நானும், தி. மு. க. வின் சார்பில் திரு. திசு. நல்லதம்பியும், பி. ஆர். பழனிச்சாமியும் கலந்துக் கொண்டோம்.

அதில் தி. மு. க. புளியாந்தோப்பு செயலாளர் திரு. பி. ஆர். பழனிச்சாமி பேசுகையில், "நாங்கள் தலைமைக் கழகத்தைக் கேட்டுதான் பதில் சொல்வோம். அதற்கு 2 அல்லது 3 நாட்கள் ஆகும். இதற்குள் நாங்கள் ஒன்றும் செய்ய முடியாது" என்று பேசினார்.

இதில் ஒரு விஷயமென்னவெனில், புளியாந்தோப்பு தி.மு.க தலைவர் தி. சு. நல்லதம்பிதான் சர்வ கட்சிக் கூட்டத்தை நடத்த வற்புறுத்தினவர். தன் செயலாளர் பேசியதைக் கேட்ட அவரே திருதிருவென முழித்துக் கொண்டுஅக்கூட்டத்தில் பேசாமலேயே மௌனமாக இருந்துவிட்டார். பிறகு அக்கூட்டத்திற்கு வந்திருந்த தி. மு. க.கள் கும்பலாக எழுந்து போய்விட்டனர்.

பிறகு பேசிய கம்யூனிஸ்டு காங்கிரஸ் பிரதிநிதிகள் இவர்கள் நடத்தையை கண்டித்து பேசினர். பிறகு ஓர் நிவாரணக் கமிட்டி, காங்கிரஸ், கம்யூனிஸ்டு சார்பில் அமைக்கப்பட்டது.

இந்த தி. மு. காக்களுடைய முரண்பட்டசெய்கையை "இந்துக்கள் சார்பாக நல்லதம்பி வேலை செய்வதும், ஹரிஜனங்களின் சார்பாக பி. ஆர். பழனிச்சாமியும ஆகிய இரு ஜாதி கோஷ்டியாக புளியாந்தோப்பில் இயங்குகின்றனர்" என்று மக்கள் பேசிக்கொள்கின்றனர்.

என்னே! தி. மு. க.வின்.சொல்லும் செயலும்!

கெனால் பகுதி வாசி.

## சர்க்கார் மருத்துவ நிலையமா? தனியார் லாபம் சம்பாதிக்குமிடமா?

ஐயா,

திருச்சி உறையூரில், போலீஸ் ஸ்டேஷனுக்கு பக்கத்தில் திருச்சி நகராட்சியில் நடத்தப்படும் ஆஸ்பத்திரியில் இலவசமாகத்தான் நோயாளிகளுக்கு சிகிச்சை அளிக்கப்பட வேண்டுமென்பதுசட்டம். ஆனால், அந்த ஆஸ்பத்திரியில் பணம் கொடுக்காமல் யாருமே மருந்து வாங்க முடிவதில்லை. புண்ணுக்கு 'பாண்டேஜ்' கட்டவும் முடிவதில்லை. எதுவும் செய்ய முடிவதில்லை என பெண்கள் எங்கு பார்த்தாலும் பேசிக்கொள்கிறார்கள். போகும் பெண்களிடம் மரியாதைக் குறைவாக நடந்துகொள்கிறார்கள்.

மேலும் நோய்பற்றிய பரிசீலனையே இருப்பதில்லை. இதுபற்றி திருச்சி நகர மாதர் சங்கம் நகராட்சியினரின் கவனத்துக்கு பல முறை கொண்டு சென்றும் பயனில்லை. அந்த தாய் சேய் நல விடுதியின் டாக்டரும் பெண்ணாக இருப்பதால் ஏழைபெண்களிடம் முறையாக நடந்து, நகராட்சியின் சட்டப்படி இலவச சிகிச்சைக்கு இனியாவது நடவடிக்கை எடுப்பார்களா? நகரசபையினர் கவனித்து தக்க நடவடிக்கை எடுப்பார்களா? வணக்கம்,

அன்புள்ள,
நேத்ராவதி,
உறையூர்.

## ஓநாய் வேதாந்தம்!

ஐயா,

நியூ பகவதி விலாஸ் ஹோட்டலில் வேலை செய்யும் தொழிலாளி ஒருவர் சங்க உறுப்பினராகச் சேர்ந்த காரணத்திற்காக அவரைப் பல வழிகளிலும் பொய்க் குற்றச்சாட்டுகளைச் சேகரித்து வேலை நீக்கம் செய்ய முயற்சி செய்கின்றனர்.

மேற் சொன்ன தொழிலாளியை வேலை நீக்கம் செய்வதற்காக முதலாளி கையாளும் தந்திரத்தைப் பாருங்கள்.

ஒருவர் வந்து 9 அணுவுக்கு சிற்றுண்டி முடித்த பின் 9 அணு பில் கொடுக்கப்பட்டு அவர் செலுத்திவிட்டுச் சென்று விட்டார். சிறிது நேரம் கழித்து முதலாளி தொழிலாளியை அழைத்து வேறு ஒரு 4 அணு பில்லைக் கையில் எடுத்துக் கொண்டு அந்த ஆளுக்கு எவ்வளவு பில் கொடுத்தாய் என்று கேட்டார். தொழிலாளி நண்பர் தான் 9 அணுவுக்குக் கொடுத்ததாகவும் சந்தேகம் ஏற்பட்டால் அதை நிவர்த்தி செய்வதாகவும் கூறினார். பழிவாங்கும் மனப்பான்மைஉள்ள முதலாளிஅதற்கு இசைந்தாரில்லை. துரதிருஷ்ட வசமாக அதே நபர் மீண்டும் இரண்டு நாட்கள் கழித்து வந்தார். இது விஷயமாக அவரை வினவிய பொழுது தான் 1 ரூபாய் கொடுத்து 9 அணு பில்லை செலுத்தி மீதிச் சில்லரை பெற்றதாகக் கூறினார்.

ஹோட்டல் முதலாளி தான் என்ன செய்வதென்று தெரியாமல் தன்னைத் தப்பித்துக்கொள்ள முயற்சி செய்தார்.

அநியாயம் ஒரு தொழிலாளி ஒரு சங்க அங்கத்தினராகச் சேர்ந்த காரணத்திற்காக அவர் மீது வேண்டுமென்றே பல பொய்க்குற்றச்சாட்டுகளைத் தயாரித்து வேலை நீக்கம் செய்ய முயற்சி செய்வது நீதியா?

எப். ராஜேந்திரன்,
புதுப்பாக்கம், சென்னை.

# ஒலியும் எதிரொலியும்

"மந்திரி பதவி வகித்து வருபவர் உள்பட பிரபல காங்கிரஸ் பிரமுகர்கள் கேரள நிலைமை குறித்து மேற்பார்வை யிடுவது நேர்மையானதா இல்லையா என்பதில் எனக்குச் சந்தேகம் ஏற்படுகிறது.

—கேரள சட்ட மந்திரி வி. ஆர். கிருஷ்ணய்யர்,

இதர காங்கிரஸ் ராஜ்யங்களில், காங்கிரஸ் மந்திரிகளும் காங்கிரஸ் தலைவர்களும் 'இம் மாதிரி' மேற்பார்வைப் பணியில் ஈடுபடுகிறார்களா? ஈடுபட, மற்றவர்களை விடுகிறார்களா? Brutal majority. அதாவது பெரும்பான்மையாயிருக்கிறோம் என்ற கீழ்த்தரமான அகம்பாவ உணர்ச்சி—அதிகார மமதை உணர்ச்சி—வைத்தது சட்டம், இட்டது வழக்கம் என்று கூத்தடிக்கிறது. சட்ட மந்திரியாரே! அது உங்களுடைய சட்ட ஞானத்தையும் நேர்மையுணர்ச்சியையும் கேட்டா இப்படி ஆட்டம் போடுகிறது? இல்லை.

"பொறுத்திருப்போம்,
காலம் மாறும்".

* * *

"குருச்சேவ் ரஷ்ய சர்வாதிகாரி"

—தினத்தந்திச் சரக்கு.

சில்லறை விஷமத்தனத்தின் சிகரம் அப்பா, சிகரம்!

* * *

"ரஷ்ய கம்யூனிஸ்டுக் கட்சியில் இருந்து சீட்டு."

—தினத்தந்தி தலைப்பு

'மத்தியக் கமிட்டியிலிருந்து புல்கானின் நீக்கப்பட்டார்' என்ற 'டாஸ்' செய்தியை கீழே கொடுத்து, மேற்படி தலைப்பை ஒரு தினசரி தீட்டுகிற தென்றால், அதைவிட, நீசப் புளுகையும் அறப சந்தோஷத்தையும் யாரும் சொல்லிவிட முடியாது.

* * *

'திராவிடக் கூட்டாட்சியில் இந்திதான் ஆட்சி மொழியாக வரும்'

—நாம் தமிழர்.

அருமை, அருமை! பிரிவினைப் போ[illegible] தலைமை வெறியில் ஒருவர் முகத்தில் ஒருவர் உமிழ்ந்துக் கொள்ளுங்கள்! சாதாரண மக்கள் வேடிக்கை பார்த்துச் சிரிக்கவும் ஏதாவது வேண்டாமா?

* * *

"தென்னாடு தேய்வதற்குக் காரணம் என்ன?"

—பத்திரிகைத் தலைப்பு.

கடலரிப்புத் தான். இல்லை, இல்லை, தலையரிப்பும்தான.

* * *

"நேருவுக்குப் பிறகு யார்? என்ற பிரச்னையில் எனக்கு அக்கறையில்லை" —பண்டித நேரு.

ஐயயோ! பிரதமரே! நீங்கள் இப்படிச் சொல்லலாமா! காங்கிரஸ்காரர்களை மறந்து விட்டுத் தானே இப்படிப் பேசுகிறீர்கள்? இல்லை, சில சமயங்களில் முற்றிலும் துறந்த முனிவர்மாதிரி ஆகாயத்திலிருந்து கொண்டு பேசுவது மாதிரிப் பேசுவீர்களே, அப்படிப் பேசுகிறீர்களா?

நேருஜி! என்னவானாலும், இன்றையக் காங்கிரஸ்காரர்களுக்கு நீங்கள்தான் தஞ்சம். அப்படியிருக்க நீங்கள் 'அக்கறையில்லை' இக்கறையில்லை என்றெல்லாம் பேசினால், அவர்கள் கதி என்னாவது?

"நம்பினோரைக் கைவிடுதல் நியாயமா?"

என்ற பாட்டு எங்கோ கேட்கிறது!

* * *

"இப்போது ரேஷன் வராது"

—பிரதமர் நேரு.

இனி வரவே வராது என்று உறுதியாகச் சொல்லி, எங்களை நிம்மதிப்படுத்த உங்களால் முடியாதாகும்!

* *

ஆயிரக்கணக்கான பேர் செத்து மடியும்போது கொள்ளை லாபம் சம்பாதிக்க முயல்வோரைத் தூக்கிலிட வேண்டுமென்று சொன்னது மெய்.

—பண்டித நேரு,

ஐயன்மீர், கருஞ்சந்தைக் கழுகுகளே! இன்று ஆயிரக்கணக்கான பேர் பட்டினிச் சாவுக்கு இரையாக[illegible] எனவே, கடிவாளம் அறு[illegible]க்குதிரை மாதிரி தாவித்தாவிக் கொள்ளை லாபம் அடியுங்கள்! நேரு பிரானின் கருணை வெள்ளம் உங்கள் மீது பொழியும், ஐயமில்லை.

* * *

"பார்மோசா பகுதி நிலைமை மோசமே."

—நேருஜி.

நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்? பாண்டுங் நாடுகளின் முன்னணித் தலைவராக நின்று, இங்குள் தி—அங்குள் தி நாடகம் ஆடாமல், ஐக்கை "நில்" என்று தடுத்து நிறுத்தக் கச்சையை வரிந்து கட்டியாக வேண்டும், அல்லவா?

* * *

மகா பாரதம் இகத்திற்கும் பரத்திற்கும் நீதிகளைச் சொல்லும் பொக்கிஷம்."

—டாக்டர். சி. பி.

நல்லறிவாளரே! இந்தி—எதிர்ப்பில் எங்கள் மூலம் கிடைத்த செல்வாக்கை, பாரதம் படிக்க ஆள் திரட்டுவதற்குப் பயன் படுத்துகிறீர்களா? அது நடவாது. இதோ 'பாரதம் எரிப்பு' இயக்கம் நடத்துகிறோம் பாருங்கள் என்று தி. மு. க. தலைமை முழங்குவது என் காதில் விழுகிறது.

—ஆனந்தம்.

# திருப்பரங்குன்றத்தில் தடியடி ஜனநாயகம்

## ஓட்டர்களுக்கு உதை! அபேட்சகர்களுக்கு அடி!

### சர்க்கிள், சப் இன்ஸ்பெக்டர் அட்டூழியம்

**கே. பி. ஜானகியம்மாள் புகார்**

மதுரை, செப். 7—

திருப்பரங்குன்றம் பஞ்சாயத் போர்டு தேர்தலின்போது, காங்கிரஸ் சர்க்காரின் தடியடி ஜனநாயகம் எப்படி நடைபெற்று இருக்கிறது என்பதை கம்யூனிஸ்ட் தலைவர். கே. பி. ஜானகியம்மாள், மதுரை ஜில்லா போலீஸ் சூப்பிரெண்டுக்கு எழுதிய புகார் மனுவைக் கீழே காண்க! கேரளத்தில் இம்மாதிரி நடந்திருந்தால் என்ன கூப்பாடு போட்டிருப்பார்கள்? எத்தனை தடவை தேபர் அறிக்கை விட்டிருப்பார்?

**ஜானகியம்மாள் கடிதம்**

மதுரை ஜில்லா போலீஸ் சூப்ரண்டெண்டு அவர்களுக்கு,

ஐயா,

திருப்பரங்குன்றம் பஞ்சாயத்து போர்டு தேர்தல் 3-9-58-ல் நடந்தது. காங். கட்சி ஊழியர்களின் சில வார்டுகளில் ஜெயிக்கும் தோம். 1-9-58 முதல் நான் நேரடியாக தேர்தல் வேலைகளைச் செய்து வந்தேன்.

இந்த 3 தினங்களிலும் சப் இன்ஸ்பெக்டர் ஜெயராமனும், சர்க்கிள் இருளப்ப கோனும் ஒருதலைப் பட்சமாகவே நடந்து கொண்டனர். மக்கள் வெறுக்கக் கூடிய முறையில், தங்கள் பூரியாமல் அட்டகாசம் செய்தார்கள். நான் கேள்விக்கண்ட சில உண்மைகளை உங்களுக்குத் தெரிவிப்பதின் மூலம், மேல் நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறேன்.

**அனுமதி இருந்தும் கூட்டத்துக்கு தடை**

நாங்கள் ஊர்வலம் நடத்த 1-9-58ல் டிப்டி சூப்ரண்டிடமிருந்து உத்தரவு வாங்கியிருந்தும் கூட நடத்தக்கூடாது என்று தடுத்துவிட்டார் சப் இன்ஸ்பெக்டர்.

நாங்கள் ஸ்டேஷன், இருநகர் இடங்க[illegible] அலைந்து கேட்டுக்கொண்டும், "யாருடைய உத்தரவையும் செல்லாது, ஊர்வலம் நடத்தக்கூடாது!" என்று கூறி, ஒரு லாரி போலீஸை நிறுத்தி, கடைசிவரையில் ஊர்வலம் நடத்தவிடாமல் தடுத்து விட்டார். பொதுக்கூட்டம் மாத்திரம் நடத்தி, பாட்டுகள் பாடி முடித்துக் கொண்டோம்.

**144 தடை! தடியடி!**

செப்டம்பர் 2-ல் இரவு 11 மணிக்கு இரண்டு லாரி போலீஸ் சப்த் தேர் வந்து, ஓட்டு சேகரிக்கவும் தேர்தல் ஆபீஸ் வேலை செய்து கொண்டிருந்த பல[illegible]ம் தடியால் அடித்தும், பயங்கரமாகக் கூச்சல் போட்டும் அட்டகாசம் செய்தார் சப் இன்ஸ்பெக்டர். மேலும், "144தடைஉத்தரவிருக்கிறது 2 பேருக்குமேல் தெருவில் நடக்கக் கூடாது" என்று கூறிக்கொண்டே தெருத் தெருவாகச் சுற்றி வந்தார். இதுவும் 11 மணிக்கெல்லாம் ஜனங்கள் பயந்து வீட்டுக்குள் சட்டம் மாதிரி நடுங்கிப் போய் விட்டார்கள்.

**அபேட்சகர்களின் கழுத்தைப் பிடித்து தள்ளினர்**

3-9-58 காலை தேர்தல் நடந்து கொண்டிருந்தபோது, காலை 10 மணிக்கு சப் இன்ஸ்பெக்டர் ஜெயராமன், லாரியுடன் வந்து இறங்கி, 2-வது வார்டு அபேட்சகர் மாயாண்டி, சிவ ஆறுமுகம், சிவனாண்டி ஆகிய 3 பேர்களையும் தேர்தல் ஆபீஸுக்குள்ளேயிருந்து வெளியே பிடித்துத் தள்ளி, யாரும் ஆபீஸிற்குள் இருக்கக்கூடாது என்று சத்தம் போட்டார். "நாங்கள் அபேட்சகர்கள். எங்களை ஏன் வெளியில் தள்ளுகிறீர்கள்?" என்று மூவரும் கேட்கவே, "போங்கடா, அபேட்சகர்கள் மூஞ்சியைப் பார்! தூங்கு மாதிரி இருக்கு" என்று கேவலமாகப் பேசியிருக்கிறார்.

8வது வார்டு ராமன் என்ற அபேட்சகரையும் அந்த வார்டு தேர்தல் ஆபீஸிலிருந்து வெகு தூரம் கழுத்தைப் பிடித்துத் தள்ளிக்கொண்டு போய்விட்டார் இந்த எஸ். ஐ. ஜெயராமன்!

**தடியடி சர்க்கிள்**

பகல் 3 மணிக்கு சர்க்கிள் இன்ஸ்பெக்டர் இருளப்பக் கோனார், 5வது வார்டு தேர்தல் ஆபீசுக்குமுன், திடீரென லாரியைக் கொண்டுவந்து நிறுத்தி, தானும் 10 போலீசாரும் இறங்கி தெருவில் நின்றவர்களையும், தேர்தல் ஆபீஸில் இருந்தவர்களையும் லத்தியால் அடித்துவிரட்டி ஆரம்பித்தார். நானும் ஊழியர்கள் சிலரும் அபேட்சகரின் ஊழியர் தேர்தல் ஆபீஸ் திண்ணையில் உட்கார்ந்திருந்தோம். ஆபீஸிற்குள் இருந்தவர்களையும் போலீஸ் அடித்தது.

நான் சர்க்கிள் இன்ஸ்பெக்டரைப் பார்த்து, "தேர்தல் ஆபீஸிற்குள்ளே வந்து அடிக்க உங்களுக்கு என்ன உரிமை இருக்கிறது? அதிகாரிகளே இப்படி தவறான முறையில் நடந்து கலாட்டா செய்யலாமா?" என்று கண்டித்துப் பேசினேன். சர்க்கிளும் சப் இன்ஸ்பெக்டரும் லாரியில் ஏறிச் சென்று விட்டார்கள்.

**ஓட்டுப் போடவந்த ஓட்டர்களுக்கும் உதை**

மாலை 4.30 மணி யிருக்கும் மில் விட்டு, தொழிலாளர்கள் 50 பேர்கள் வரை ஓட்டுப் போடுவதற்கு வந்தார்கள். 2-வது வார்டு அபேட்சகர் தம்பி ஆறுமுகம், கன்னையா இருவரும் ஓட்டர்களுக்கு சிலிப் வழங்கிக் கொண்டிருக்கும்போது, திடீரென்று லாரியில் வந்து இறங்கிய சப் இன்ஸ்பெக்டர் ஜெயராமன், திடீரெனப் புகுந்து லத்தியால் விரட்டி யடித்து அந்த இருவரையும் லாரியில் தூக்கிப் போட்டுக்கொண்டு போய்விட்டார்.

இதேபோல் காலையில் திரு. அய்யாசாமியையும் கைது செய்து லாக்கப்பில் அடைத்தார்.

இந்த இரு அதிகாரிகளைப் பற்றியும் பலமுறை புகார் அனுப்பியும் தாங்கள் எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை. இந்த தடவையாவது நடவடிக்கை எடுப்பீர்களா?

## தமிழ்நாடு தொழிற் சங்க காங்கிரஸ் ஏழாவது மகாநாடு

### கோவையில் நவம்பர் 15, 16-ந் தேதிகளில் நடைபெறும்

**வரவேற்புக் கமிட்டி அமைக்கப்பட்டுள்ளது**

சென்னை, செப். 6—

தமிழ்நாடு தொழிற் சங்க காங்கிரஸ் நிர்வாகக் கமிட்டி ஜூலையில் திருச்சியில் கூடி, ஏழாவது மகாநாட்டை கோவையில் நடத்துவதென்று தீர்மானித்தது. இதன் அடிப்படையில் 31-8-58ல் கோவை ஜில்லா தொழிற் சங்க பிரதிநிதிகள் கூட்டம் கோவை ஜில்லா மில் தொழிலாளர் சங்க கட்டிடமாகிய தியாகிகள் நிலையத்தில் கூடியது. [illegible] கூட்டத்தில் கோவை ஜில்[illegible] தொழிலாளர் சங்கம், மதுக்கரை சிமெண்டு தொழிலாளர் சங்கம், டீ, காபி தொழிலாளர் சங்கம், மேட்டுப்பாளையம்-நீலகிரி மோட்டார் தொழிலாளர் சங்கம் கோவை கவால் தொழிலாளர் சங்கம், திருப்பூர் முனிசிபல் தொழிலாளர் சங்கம், காட்டன் ஜின்னிங் அண்டு ஆயில் மில் தொழிலாளர் சங்கம், திருப்பூர் பனியன் பாக்டரி தொழிலாளர் சங்கம், திருப்பூர் ரைஸ் மில் தொழிலாளர் சங்கம் பிரதிநிதிகள் கலந்து கொண்டனர்.

இக் கூட்டத்தில் 15 தோழர்களைக் கொண்ட ஒரு வரவேற்புக் கமிட்டி அமைக்கப்பட்டது.

1. தோழர்கள்.கே.கிருஷ்ணன், 2. கே. என். சின்னையன், 3. ஏ. கணபதி, 4. எஸ். கருப்பசாமி, 5. ஆர். இளன், 6. டி. சுப்ரமணியம், 7. பார்வதி கிருஷ்ணன், 8. என். மாருதாசலம், 9. டி. பாலன், 10. எம். ஏசையன், 11. கே. ஆர். ராமசாமி, 12. சி. மதுரம், 13. நாராயணசாமி செட்டியார், 14. டி. ஆர். கணேசன், 15. ஆர். ரங்கசாமி, எம். சி. மகாநாட்டிற்கு 5000 ரூபாய் நிதி திரட்டுவதென்று முடிவு செய்யப்பட்டது. கீழ் கண்ட முறையில் சங்கங்கள் வசூல் செய்ய வேண்டுமென்று தீர்மானிக்கப் பட்டது.

1. கோவை ஜில்லா மில் தொழிலாளர் சங்கம் ரூ. 2000,
2. கோவை ஜில்லா ஜெனரல் இன்ஜினீரிங் அண்டு மெக்கானிகல் தொழிலாளர் சங்கம் ரூ. 500
3. தமிழ்நாடு தோட்டத் தொழிலாளர் சங்கம் ரூ. 500
4. மதுக்கரைசிமெண்ட் தொழிலாளர் சங்கம் ரூ 300
5. கோவை டீ அண்டு காபி தொழிலாளர் சங்கம் ரூ. 200
6. மேட்டுப்பாளையம் - நீலகிரி மோட்டார் தொழிலாளர் சங்கம் ரூ. 200
7. திருப்பூர் பனியன் பாக்டரி தொழிலாளர் சங்கம் ரூ 150
8. கோவை கவால் தொழிலாளர் சங்கம் ரூ. 100
9. திருப்பூர் ரைஸ் மில் தொழிலாளர் சங்கம் ரூ. 75
10. கோவை காட்டன் ஜின்னிங் அண்டு ஆயில்மில் தொழிலாளர் சங்கம் ரூ. 75
11. திருப்பூர் முனிசிபல் தொழிலாளர் சங்கம் ரூ. 20

கோவையிலுள்ள இதர சங்கங்களின் கோட்டா வரவேற்பு கமிட்டி சம்பந்தப்பட்ட சங்க நிர்வாகிகளை கலந்து நிர்ணயிக்கப்படும்.

மகாநாட்டை நவம்பர் 15, 16 தேதிகளில் நடத்துவதென்றும், மகாநாட்டிற்கு தோழர் எஸ். ஏ. டாங்கேயை தலைமை தாங்கவும், கேரள தொழில் அமைச்சர் டி. வி. தாமஸையும், சென்னை தொழில் அமைச்சர் ஆர். வெங்கடராமனையும் அழைப்பதென்று முடிவு செய்யப்பட்டது.

(க. கி.)

## பாகிஸ்தான் பிரதமர் இந்தியா வருகை

### நிகழ்ச்சித் திட்டத்தில் சிறு மாறுதல்

புதுடில்லி, செப். 7—

நேருவுடன் பேச்சுவார்த்தைகள் நடத்த இந்தியாவுக்கு வரும் பாகிஸ்தான் பிரதமரின் வேலை திட்டத்தில் சிறு மாறுதல் ஏற்பட்டிருக்கிறது.

புதிய திட்டத்தின்படி, நூன், பாலம் விமான நிலையத்தில் செப். 9ம் நாள் முற்பகல் 11-20 மணிக்கு வந்திறங்குவார். 11ம் நாள் காலை 9.30 மணிக்கு, டில்லியிலிருந்து கராச்சிக்குப் புறப்படுவார்.

(பி. டி. ஐ.)

## சட்டசபையில் கேள்விநேரம்

சென்னை, செப் 8—

இன்றைய சட்ட சபைக் கூட்டத்தில், கேள்வி நேரத்தின் போது திரு. வி கே. கோதண்டராமன் (கம்யூ) '1957 அக்டோபர் முதல் 1958 மார்ச் முடிய சென்னை ராஜ்யத்தில் அம்மை நோயால் மாண்டவர் விபரம் என்ன?' என்று கேட்டார்.

அதற்கு அமைச்சர் அளித்த பதிலாவது:

முனிசிபல் ஏரியாவில் மாண்டோர் ஆண்கள் 971, பெண்கள் 916 ஆகமொத்தம் 1887 என்றும், முனிசிபல் அல்லாத பகுதிகளில் மாண்டோர் ஆண்கள் 1006, பெண்கள் 983, ஆகமொத்தம் 1989 என்றும் ஆகமொத்தம் ராஜ்ய முழுவதும் 3876 பேர் அம்மை நோயால் மாண்டனர் என்று தெரிவித்தார். இதில் 836 பேர் ஒரு வயது குழந்தைகள், 1290 பேர் பத்து வயதுக்குட்பட்ட குழந்தைகள், பத்து வயதுக்கு மேற்பட்டோர் 1750 பேர். பெரியம்மையால் மாண்டோர் தொகைபற்றி திரு. வி. கே. கோதண்டராமன் கேட்ட மற்றொரு கேள்விக்கு "விவரம் இல்லை" என்றார் அமைச்சர்.

**இரட்டை மெம்பர்தொகுதி**

'அசெம்பிளி இரட்டை மெம்பர் தொகுதிகளை ஒற்றை மெம்பர் தொகுதிகளாக மாற்றியமைக்கும் உத்தேசம் சர்க்காருக்குஉண்டா?' என்று திரு. என். ஆர். தியாகராஜன் (காங்) கேட்டகேள்விக்கு 'இல்லை' என்று பதிலளிக்கப்பட்டது.

**பெண் குமாஸ்தாக்கள்**

'பெண் கிளர்க்குகளை அல்லது ஆபீஸர்களை ஆண் கிளர்க்குகளுடன் சேர்த்து வேலைக்கமர்த்தும் முறையை நீக்கிவிட்டு, அரசாங்கக் காரியாலயம் ரெவினியூ போர்டு அலுவலகம் கலெக்டர் அலுவலகம், இதர இலாகா தலைவர்களின் அலுவலகங்களில், சில பிரிவுகளில் பெண்களை மாத்திரம் வேலைக்கமர்த்தும் உத்தேசம் அரசாங்கத்தாருக்கு உண்டா?' என்று திரு லாசர் (காங்) கேள்வி கேட்டார். 'இல்லை' என்று நிதி அமைச்சர் பதிலளித்தார்.

பெண் குமாஸ்தாக்கள் இருப்பதினாலேதான் ஆண்கள் சுறுசுறுப்பாக வேலை செய்கிறார்கள் என்பது சர்க்காருக்குத் தெரியுமா என்று திரு.கே.விநாயகம் (காங்.) கேள்வி கேட்டார். அதற்கு "சர்க்கார் அப்படிக் கருதவில்லை" என்று அமைச்சர் பதிலளித்தார்.

**பொலிகாளை**

பொலிகாளை பராமரிப்பு விஷயமாக திரு. ஏ. ஏ. ரஷீத் (காங்) கேட்டதொரு கேள்விக்கு, அமைச்சர் பதிலளிக்கையில், "சென்னை ராஜ்யத்தில் 1 கோடி 17 லக்ஷம் மாடுகளும், 70 லக்ஷம் ஆடுகளும் உள்ளன ஆடுமாடு வளர்ப்புப் பண்ணைகள் ஓசூரிலும், புதுக்கோட்டையிலும், ஓரத்தநாட்டிலும் பள்ளத்தூரிலும் உள்ளன.

பொலி காளை வளர்க்கும் தனி நபர்களை ஊக்குவிக்க சர்க்கார் உதவிநிதி தருகிறது. பொலிகாளை ஒன்றுக்கு ரூ. 200 தருகிறது. பொலி எருமைக்கடா ஒன்றுக்கு ரூ. 220 தருகிறது. இவ்விதம் 860 பொலிகாளை, பொலி எருமைக் கடாக்களுக்கு உதவிநிதி தரப்படுகிறது.

1941 முதல் ஆடுமாடு பராமரிப்பு பண்ணை நடத்துகிறவர்களுக்கு, சர்க்கார் பண்ணையிலிருந்தே இனமாக பொலிகாளைகள் கொடுக்கப்படுகிறது. இதில் நிபந்தனை என்னவென்றால், 3 வருடம் இந்த காளைகளை நல்ல முறையில் வளர்க்க வேண்டும்; அத்துடன் இந்த 3 வருட காலத்தில் 180 தடவைக்குக் குறையாமல் பொலிபுரிந்திருக்க வேண்டும்." என்று பதிலளித்தார் அமைச்சர்.

**சந்தன எண்ணெய்**

'பொதுத் துறையில் சந்தன எண்ணெய் தயாரிக்கும் தொழிற்சாலையை ஆரம்பிப்பது சம்பந்தமாக முடிவான தீர்மானம் ஏதாவதுசெய்யப்பட்டதா?' என்று திரு எம். கல்யாணசுந்தரம் கேட்ட கேள்விக்கு உள் துறை அமைச்சர், ஒரு பரீட்சார்த்த திட்டம் ஆரம்பிக்கப் போவதாகக் கூறினார்.

**அறநிலைய நூல் நிலையங்கள்**

இந்து மத அறநிலைய நூல் நிலையங்கள் பற்றி திரு. பி. ஜி மாணிக்கம் (காங்) ஒரு கேள்வி கேட்டார். அதற்கு உள் துறை அமைச்சர் பக்தவத்சலம் பதிலளிக்கையில், 'இந்துமத அறநிலையங்களை சர்க்கார் கண்காணித்து பாதுகாப்பதாகவும், முஸ்லீம் மத அறநிலையங்களுக்கு இந்திய சர்க்கார் சட்டமியற்றியிருப்பதாகவும், தெரிவித்தார்.

இந்த கோவில் நூல் நிலையங்களில்,'மதவிரோதமான நூல்கள் இல்லாதபடி சர்க்கார்நடவடிக்கை எடுக்குமா, என்று திருமதி அனந்தநாயகியும் (காங்), ஆபாசத்தைப் பரப்பும் புராண நூல்கள் இருக்கலாமா என்று திரு. ஆசைத் தம்பியும் (தி. மு. க.) கேள்வி கேட்க, "நல்ல நூல்கள் வைக்கப்படும்" என்று இருவருக்கும் ஒரே பதிலை அளித்தார் அமைச்சர். புராணத்தை ஆபாசமென்று சொல்லலாமா என்று கேட்டார் ஒரு காங்கிரஸ் மெம்பர். அது அவரவர் கருத்து என்றார் அமைச்சர்

**யாழ், நாதஸ்வரம்**

அழிந்துபோன யாழையும், அழிந்துகொண்டிருக்கும் நாதஸ்வர உற்பத்தி தொழிலையும் புதுப்பிக்கப்படுமா என்று திரு. வேதரத்தினம், அனந்தநாயகி முதலியோர் கேட்டனர். முயற்சிக்கப்படும் என்றார் அமைச்சர்.

## போலீஸ் நாய்கள்பற்றி சட்டசபையில் கேள்வி

சென்னை, செப். 8—

இன்றைய சென்னை சட்டசபை கேள்வி நேரத்தின்போது, திரு வி. கே. கோதண்டராமன், 'போலீஸ் நாய்கள்' பற்றி கேள்வி கேட்டார். "வேலூர் குடியாத்தம் நகரங்களில் திருடுபோன சொத்துக்களையும் திருடர்களையும் கண்டு பிடிப்பதற்காக 'போலீஸ் நாய்கள்', அனுப்பப்பட்டனவா? திருடுபோன பொருள்களும் திருடர்கள் யாவரும் கண்டுபிடிக்கப்பட்டனரா?" என்று கேட்டார்

அதற்கு போலீஸ் அமைச்சர் பக்தவத்சலம்,"பல பொருள்களும் பல திருடர்களும் பிடிபட்டனர்" என்றார்.

'உண்மைத் திருடர்களிருக்க, ஒரு பாவமுமறியாதவர்களையும் இந்த 'போலீஸ் நாய்கள், 'பிடித்திருக்கிறது என்பது உண்மை தானா?' என்று இன்னொருவர் கேள்வி கேட்டார். அதற்கு அமைச்சர், "மனிதர்களே தவறிவிடுகிறபோது, நாய்களும் தவறு செய்ய முடியுமல்லவா!" என்று பதிலளித்தார்.

கோவை ஜில்லாவின் விசேஷ நிலைமையை யொட்டி, போலீஸ் நாய்கள் அங்கேயே இருக்க ஏற்பாடு செய்யப்படுமா என்று திரு பி. எஸ். சின்னத்துரை (பி. சோ.) கேட்டார்.

அதற்கு அமைச்சர், "கோவை ஜில்லாவை அவ்வளவு மோசமாக நாங்கள் கருதவில்லை" என பதிலளித்தார். மற்றும் பல உறுப்பினர்கள் தத்தம் தொகுதிகளுக்கு "போலீஸ் நாய்கள்" வேண்டும் என்று கேட்டனர்.

## உலக பாங்க் தலைவரோடு மொரார்ஜி பேச்சு

### இந்தியாவுக்கு 10 கோடி டாலர் கடன் கிடைக்கலாம்

வாஷிங்டன், செப். 7—

உலக பாங்க் தலைவரான யூஜன்பிளாக்கோடு இந்திய சர்க்கார் நிதி மந்திரி மொரார்ஜி தேசாய் இன்று பேச்சுவார்த்தைகள் நடத்தினார். இந்தியாவின் அந்நிய நாணய செலாவணி நெருக்கடியை தீர்ப்பதில் உலக பாங்க் எந்த அளவுக்கு உதவி செய்யலாம் என்பது பற்றி அவர்கள் பேச்சுவார்த்தை நடத்தினார்கள். இவ்வகையில் உலக பாங்க் 10 கோடி டாலர் கடன்தரலாம் என்று தெரிகிறது. இது தவிர ரயில்வே அபிவிருத்திக்கு 8½ கோடி டாலர் கடன் தரலாம். இன்று நடைபெற்ற பேச்சுவார்த்தைகளில் பி. கே. நேரு, ஈ ரஹமிராவ் ஆகியோரும் கலந்து கொண்டனர். (ராய்ட்டர்)

## உலக பாங்க் தலைவர் மொரார்ஜி சந்திப்பு

வாஷிங்டன், செப். 7—

இந்திய நிதி மந்திரி மொரார்ஜி தேசாய் இன்று உலகபாங்கியின் தலைவர் யூஜின் பிளாக்கைச் சந்தித்தார். இந்தியாவின் கடன் தேவைகளைப் பற்றி அவரிடம் பேசினார்.

வாஷிங்டனில் தன்னுடைய பேச்சுகளை முடித்துக்கொண்டு, அவர் புதன்கிழமை காலையில் நியூயார்க்குக்குப் புறப்படுவார்.

இந்தியாவின் ரயில்வே அபிவிருத்திக்காகவென்று உலக பாங்கி 8 கோடியே 50 லட்சம் டாலர் (சுமார் 42½ கோடி ரூபாய்) கடன் கொடுக்க ஒத்துக் கொண்டுள்ளதாம் இந்தக் கடன் இந்தியா ஏற்கனவே வாங்கிய ரயில்வே சாதனங்களுக்குக் கொடுக்க வேண்டிய பாக்கிக்குப் பெரும்பாலும் கொடுக்கப்படுமாம்.

மேற்கொண்டு இந்தியாவின் மின்சார அபிவிருத்திக்கு உலக பாங்கி இன்னொரு கடன் தொகை கொடுத்து உதவுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. (பி. டி. ஐ.)

## தெ. ஆப்பிரிக்க வெளி விவகார மந்திரியின் திமிர் தாண்டவம்

கேப்டவுன், (தெ. ஆப்ரிக்கா) செப். 7—

தென் ஆப்ரிக்காவில் இந்தியர்கள் நடத்தப்படும் விதத்தைப் பற்றியோ, அல்லது தெ. ஆப்ரிக்க சர்க்காரின் இனக் கொள்கைகளைப் பற்றியோ ஐ. நா வில் கிளப்பப்படும் எவ்வித விவாதத்தையும் ஐ. நா. விலுள்ள தெ. ஆப்ரிக்க தூதுக் குழு புறக்கணிக்கும், என்று தெ. ஆப்ரிக்க வெளி விவகார மந்திரி எரிக் லோவ், இங்கு விமான நிலையத்தில் நிருபர்களிடம் கூறினார்.

## பாதுகாப்புச் சட்டத்தை நீடிக்கவும்

### விவசாயிகளைப் பாதுகாக்க உடனே நடவடிக்கை எடுக்கவும்

**கோவை தொழிற்சங்கத் தீர்மானம்**

கோவை, செப். 4—

ஏற்கனவே கொண்டு வரப்பட்ட பண்ணையாள் பாதுகாப்புச் சட்டம் இம்மாதம் 18ம் தேதியுடன் முடிவடைகிறதென்பதைத் தெரிந்த மிராஸ்தார்கள் விவசாயிகளை நிலத்தைவிட்டு வெளியேற்ற நாள் எண்ணிக்கொண்டிருக்கின்றனர். பாதுகாப்புச் சட்டம் அமுலில் இருந்த காலத்தில் மிராஸ்தார்கள் அதிலுள்ள ஓட்டைகளை தங்களுக்குச்சாதகமாகபயன்படுத்திக்கொண்டு பல ஜில்லாக்களில் விவசாயிகளை நிலத்தைவிட்டு வெளியேற்றிக் கொடுமைப்படுத்தி வந்திருக்கின்றனர். எனவே இந்தப் பாதுகாப்புச் சட்டம் முடிவடைந்தால் பெரும்பாலான விவசாயிகள் தங்களின் வாழ்க்கையை நடத்த முடியாமல் கொடுமைப்படுத்தப்படுவார்கள் என்பதை சர்க்காருக்கு எடுத்துக் காட்டுவதுடன் பண்ணையாள் பாதுகாப்புச் சட்டத்தை நிரந்தரமாக அமுலில் இருக்கவும் அதில் ஓட்டைகள் இருப்பதையும் திருத்தி விவசாயிகளுக்கு பாதுகாப்பளிக்க சர்க்கார் உடனே நடவடிக்கை எடுக்க வேண்டுமெனவும் சென்னை சர்க்காரையும் சம்பந்தப்பட்ட அதிகாரிகளையும் வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளும் தீர்மானமொன்றை 1-9-58ல் திரு. எம். குப்புசாமிக் கோனார் தலைமையில் நடைபெற்ற கோயமுத்தூர் டீ, காபி தொழிலாளர் சங்கத்தின் நிர்வாகக் கமிட்டிக் கூட்டம் நிறைவேற்றி, சென்னை ராஜ்ய விவசாய மந்திரிக்கு அனுப்பியுள்ளது. (க.கி)

## குழம்பிய குட்டையில் மீன் அகப்படவில்லை!

**பிரிட்டனின் ஏமாற்றம்!**

காவென்டரி, செப். 7—

ஐஸ்லாந்தை ஒட்டியுள்ள 12 மைல் தூரமுள்ள சமுத்திரத்தில் பிரிட்டன் மீன் பிடிக்கக் கூடாது என்று ஐஸ்லந்து கூறி வருகிறதல்லவா? இந்தப் பிரகடனத்தை மீறி பிரிட்டிஷ் மீன் பிடிக்கும் முதலாளிகள் கடற்படையின் பாதுகாப்புடன் மீன் பிடித்து வந்தார்களல்லவா?

மீன் பிடிக்கிற இடத்தில் ராணுவக் கப்பல்களின் சந்தடி அதிகமாவதால், பிரிட்டிஷ்காரர்கள் வலையில் மீன் அகப்படுவதில்லை. இத்துடன், ஐஸ்லந்தின் 'கன் போட்டுகளும்' ரீங்காரத்துடன் தனது 12 மைல் வட்டத்தில் சதா சுற்றிப் பவனி வந்து கொண்டிருக்கின்றன. இவ்வாறு செல்வதால் அந்த 12 மைல் சமுத்திர வட்டம் குழம்பிவிட்டது. எனவே இந்த குழம்பிய குட்டையில் மீன் பிடிப்பதில் பலனில்லை என்று கூறிக்கொண்டு இந்த 12 மைல் வட்டத்திற்கு அப்பால் சென்று மீன் பிடிக்கின்றனர் பிரிட்டிஷ்காரர்கள்.

## ஜனசக்தி கட்டிட நிதி

**திருச்சி:** புதுக்கோட்டை கிழவிதி கிளை மூலம் தோழர் திரு ஞானசம்பந்தம் ரூ. 2; சுப்பராயன் ரூ. 1-8.0; சிதம்பரம் கே. வேணுகோபால் பிள்ளை, பி நடராஜன், எம். தேவராஜன், ராமசாமி தலா ரூ. 1; வி. முத்து, திருமூர்த்தி தலா அணா 8; பி. சண்முகம், சி. நாகரத்தினம் அணா 4. திருச்சி கல்லூரி சிவாஜி கணேசன்மன்றம் ரூ.2.

**மதுரை:** பண்ணைபுரம் பாவலர் வரதராஜன் ஆண் குழந்தைக்கு ராமமூர்த்தி என தோழர் ஸ்டான்லி பெயரிட்டபோது ரூ. 2 மதுரை 6-வது வார்டு கிளை ரூ. 10; எம். ஓ. கமிஷன் போக ரூ. 9.85; பெரியகலயம்புத்தூர் தோழர் சின்னக்கருப்பண்ணன் ரூ. 4; பழனி விஜயகுமார் மில் தொழிலாளி தோழர் சி. பரமசிவம்-சரஸ்வதி திருமணத்தின்போது ரூ. 2; ஒட்டன்சத்திரம் கட்சிக் கிளை மூலம் ரூ 2.

**தஞ்சை:** திருபுவனம் தோழர் கிருஷ்ணமாச்சாரிக்கு ஆண் குழந்தை பிறந்ததை முன்னிட்டு ரூ. 1; காரம்பயம் தோழர்கள் சுப்பையன்-சுந்தரம் திருமணத்தின்போது ரூ. 5.

**வட ஆர்க்காடு:** வேலூர் சைதாப்பேட்டைக் கிளைத் தோழர்கள் வி. சி. கண்ணன், வே. து. சம்பந்தன், சி. முனிவேல், ஆர். கண்ணன் தலா ரூ. 1; திமிரி பீடித் தொழிலாளர்கள் தோழர் பெ. க. சுப்பிரமணியம் மூலம் ரூ: 2-19.

**பாண்டி:** பாண்டிச்சேரி திருமதி புஷ்பவல்லி மோனிங் அவர்கள் குமாரத்தி சுமதியின் காதணி விழாவின்போது ரூ.2 எம். ஓ. கமிஷன் போக ரூ 1.85.

**காரைக்கால்:** தோழர் விச்சு மூலம் காரைக்கால் அனுதாபி ஒருவர் ரூ 3.

**கோவை:** திருப்பூர் ரூரல் பெரிய பூலுப்பட்டி பிரதேச கிராம முன்னேற்ற சங்கம் ரூ. 2; கோவை தோழர் வேலாயுதம்-தேவகி திருமணத்தின்போது பாரதி படிப்பகத்தின் மூலம் ரூ. 2,

**நெல்லை:** கோவில்பட்டி லக்ஷிமி மில் தொழிலாளி மூக்கையாவின் பெண் மகவுக்கு ரோஸம்மாவெனப் பெயரிட்டபோது ரூ. 2.

**தென்னாற்காடு:** பூதாமூரில் நடைபெற்ற திரு. சுப்பிரமணியம்-யசோதை திருமணத்தின்போது ரூ. 1.

**ராமனுதபுரம்:** ராமச்சந்திரபுரம் தோழர் சங்கரலிங்கம்-சிவகாமி திருமணத்தின்போது ரூ. 1.85.

**சென்னை:** சென்னை பஸ் போக்குவரத்து ஊழியர் கே. ராமன் தூத்துக்குடி தேர்தல் பற்றிய பந்தயத்தில் ஜெயித்தது ரூ. 1.

**பம்பாய்:** மாதுங்கா தோழர் டி. என். ராஜன். 75 ந. பை.

**மதுரை:** மதுரை 6வது வார்டு வயிரவன் செட்டியார் ஸ்டோர் அய்யாத்துரை என்ற எஸ். கே. ராமச்சந்திரனுக்கும்-பஞ்சவர்ணத்திற்கும் நடந்த திருமணத்தின்போது ரூ. 5. எரியோடு சின்னத்துரை—அஞ்சலை திருமணத்தின்போது ரூ. 2. மதுரை கோதண்டராமன் ஸ்பின்னிங் மில்ஸ் ஏ. குருசாமி-முத்துலட்சுமி திருமணத்தின்போது ரூ. 2. மதுரை 6வது வார்டு தோழர். கே. சின்னையா செட்டி குமாரர் ஷண்முகத்திற்கும், கஸ்தூரி செட்டியார் புதல்வி நாச்சம்மாளுக்கும் நடைபெற்ற திருமணத்தின்போது ரூ. 5. மதுரை 27வது வார்டு கிளை உறுப்பினர் தோழர். பொன்னுச்சாமி-சாவித்திரி திருமணத்தின்போது ரூ. 5. மதுரை 6வது வார்டு தோழர். எம். ஏ. துரைராஜ் அவர்கள் குமாரனுக்கு "மேதினச் செல்வன்" எனப் பெயரிட்டு ரூ. 3.

**ராமனுதபுரம்:** ஆவாரம்பட்டி தோழர்கள். கந்தசாமி-குருவம்மாள் திருமணத்தின்போது ரூ 2. கிருங்காக்கோட்டை சீனிவாசன்-சின்னம்மாள்; சின்னையா-இந்திராணி திருமணத்தின்போது ரூ. 2.

**சேலம்:** ஆத்தூர் தாலுகா தாண்டவராயபுரம் தோழர்கள். டி. எம். குமரசாமி-பச்சியம்மாள் திருமணத்தின்போது ரூ 5.

**கோவை:** ரங்கசாமி கவுண்டன் புதூர் தோழர்கள். ஆர். பழனியப்பன்-சுப்பாத்தாள் திருமணத்தின்போது ரூ 5.

**வட ஆர்க்காடு:** வேப்பனேரி கிராமம் தோழர். ஆர். வேணுகோபாலன்-ஜெயம்மாள் திருமணத்தின்போது தோழர். கோதண்டராமன் எம். எல். ஏ. மூலம் ரூ 10. சத்துவாச்சாரி கிளைக்கமிட்டி தோழர். ஆர். சுப்ரமணியம்-குப்பம்மாள் திருமணத்தின்போது ரூ 2.

**திருச்சி:** பச்சப்பட்டி கட்சி தோழர். ஆர். காளியப்பன்-காளியம்மாள் திருமணத்தின்போது ரூ. 3.

**தஞ்சை:** கரம்பயம் தோழர் குப்புசாமி—பார்வதி திருமணத்தின்போது தோழர் பாரதிமோகன் மூலம் ரூ 5.

**சென்னை:** கொருக்குப்பேட்டை வாசுதேவன்-வசந்தா திருமணத்தின்போது ரூ 5; 5-வது வட்டம் தோழர் கண்ணப்பா-கிருஷ்ணவேணி திருமணத்தின்போது தோழர் முத்தையா மூலம் ரூ 5; கோடம்பாக்கம் தோழர்கள் ராஜாராம்-தனலக்ஷிமி; மகாதேவன்-மோகனாம்பாள் திருமணத்தின்போது தோழர் ஐ. மா. பா மூலம் ரூ. 2.

| | | |
|---|---|---|
| | 68 | 00 |
| ஏற்கனவே பிரசுரித்தது | 11413 | 48 |
| மொத்தம் ரூ. | 11481 | 48 |

## ஜனசக்தி ஏஜண்டுகளுக்கு

**முக்கிய அறிவிப்பும் முன்னெச்சரிக்கையும்**

அன்பர்களே,

நியூஸ் பிரிண்ட் கிடைப்பதில் உள்ள சிரமங்களையும், கஷ்டங்களையும் பற்றி 29-8-58 ம் தேதி ஜனசக்தி தலையங்கத்தில் படித்திருப்பீர்கள். நாம் அந்த கஷ்ட நஷ்டங்களை அனுபவித்துக் கொண்டேதான் அவற்றை எழுதியுள்ளோம் என்பதைக் கவனத்தில் கொண்டு பிரதி மாதம் பில்களை காலா காலத்தில் அனுப்பி பத்திரிகையைத் தொடர்ந்து நடத்துவதற்கு உதவக் கோருகிறோம். அன்றாட மார்க்கட்டில் அநியாய விலையில் காகிதம் பெற்று பத்திரிகை கொண்டு வர வேண்டிய நிலையில் இன்று நாம் உள்ளோம்.

ஆகவே ஏற்கனவே அறிவித்திருந்தபடி ஸ்பெஷல் கமிஷன் முறை செப்டம்பர் மாதம் முதல் அமுலுக்கு கொண்டு வரப்படுகிறது. அதன்படி செப்டம்பர் 10 தேதிக்குள் ஆகஸ்ட் மாத பில் தொகை முழுவதும் எங்கள் கைக்கு கிடைத்து விடும்படி செய்தால் அந்த பில்களுக்கு, பில் நிகரத் தொகை (கமிஷன் போக பில் தொகை) யின் மேல் 100 க்கு 2 ரூபாய் வீதம் ஸ்பெஷல் கமிஷன் தரப்படும்.

தவிர 15 தேதிக்குள் ஆகஸ்ட் பில் தொகையை பூர்ணமாய் தீர்க்காதவர்களுக்கு வேறு முன்னெச்சரிக்கையின்றி பத்திரிகை நிறுத்தப்படும். அந்நிலை யாருக்கும் ஏற்படாமல் இருக்க ஏஜண்டுகளும், வாசகர்களும் ஏற்பாடு செய்து கொள்ளுங்கள்.

நிர்வாகி

ஜனசக்தி

## விருதுநகர்மில்தொழிலாளர்களுக்கு 4 மாத போனஸ் வெற்றி

### செங்கொடி சங்கத்துடன் ஒப்பந்தம்

விருதுநகர், செப். 4—

கருமுத்து தியாகராஜ செட்டியாருக்குச் சொந்தமான விருதுநகர் டெக்ஸ்டைல் மில்லில் 1957ம் வருஷத்திற்கு ரூ 3,12,949 நிகர லாபம் கிடைத்திருக்கிறது.

இந்த மில் தொழிலாளர்களின் போனஸ் சம்பந்தமாக 28-8-58ல் விருதுநகர் டெக்ஸ்டைல் மில் நேஷனல் லேபர் யூனியன் (ஏ. ஐ. டி. யு. சி. யுடன் இணைக்கப்பட்டது) பிரதிநிதிகளுக்கும், மில் நிர்வாகத்தின் பிரதிநிதிகளுக்கும் இடையே நடைபெற்ற பேச்சு வார்த்தைகளின் பயனாக '57 ம் வருஷத்திய மொத்த அடிப்படைச் சம்பளத்தில் 33⅓ சதம் அதாவது 4 மாத சம்பளம் போனசாகக் கொடுப்பதென்று ஒத்துக் கொள்ளப்பட்டது. மேலும் ரூ. 26 சம்பளம் வாங்கிவரும் தொழிலாளர்களுக்கு அதை ரூ. 30-1-0 ஆக உயர்த்துவதென்றும், இரவு அலவன்ஸ் கொடுப்பதென்றும். ஒரு வருஷத்திற்கு மேல் சர்வீஸ் உள்ள நிரந்தர தொழிலாளர்கள் அனைவருக்கும் பெர்மனெண்ட் கார்டு வழங்குவதென்றும் ஒப்பந்தம் ஏற்பட்டுள்ளது.

மேற்படி கோரிக்கைகள் எல்லாம் 1-9-58 முதல் அமுலாகின்றன. போனஸ் தொகையை செப். 15, 16 தேதிகளில் பட்டுவாடா செய்வார்கள்.

ஒப்பந்தத்தில் வி. டி. மில் நேஷனல் லேபர் யூனியன் தலைவர் பி. கே. ஜனார்த்தனமும். மதுரைப் பஞ்சாலைத் தொழிலாளர் சங்கக் கூட்டுக் காரியதரிசி என். சிவகுருநாதனும், நிர்வாகத்தின் சார்பில் திரு. மாணிக்கவாசகமும் கையொப்பமிட்டுள்ளனர்.

வி. டி. மில் நேஷனல் லேபர் யூனியனுடன் பேச்சு வார்த்தை நடத்தக்கூடாது என்று ஐ. என். டி. யு. சி. சங்கம் செய்த சூழ்ச்சிகள் ஒன்றும் பலிக்கவில்லை என்று திரு. பி கே. ஜனார்த்தனன் அறிவிக்கிறார்.

## எல்லைத் தகராறு விஷயமாக நேருவுடன் பேசுவார்

புதுடில்லி, செப். 9—

பாகிஸ்தான் பிரதம மந்திரி பெரோஸ்கான் நூன் இன்று டில்லி வந்து சேருகிறார். அவருடன் வெளிவிவகார இலாகா செயலாளர் பெய்க், தற்காப்பு இலாகா செயலாளர் எம். எம். குர்ஷித் மற்றும் 9 பேர்கள் வருகின்றனர். இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்குமிடையே ஏற்பட்டுள்ள எல்லைத் தகராறுகளைப் பற்றிதான் இரு பிரதமர்களும் பேசுவார்கள் என்று தெரிகிறது. காஷ்மீர் விஷயம் ஐ. நா. சபை முன் இருப்பதால் அப் பிரச்னைபற்றி பேச்சு வார்த்தைகள் நடைபெறாது. இரு தேசங்களுக்கிடையே உள்ள பிரயாணக் கட்டுப்பாடுகள் பற்றியும் இரு பிரதமர்களும் பேசலாம்.

## குந்தாவில் கொடுமை என்ஜினியரின் தர்பார்

### தொழில் அமைச்சர் கவனிப்பாரா?

சென்னை, செப். 4—

சென்றமாதம்15-ம் தேதியன்று குந்தா மின்சாரத்திட்ட நிர்வாக என்ஜினியர் (கெ.4,இ.வி.) சேஷன் என்பவர் இரண்டு தொழிலாளர்களை தனது வீட்டில் கட்டி வைத்து "அடியடி" என்று அடித்து துன்புறுத்திய செய்தி இங்கு கிடைத்துள்ளது. இதுபோலவே மற்றுமொரு தொழிலாளியை தனது வீட்டில் ஒரு நாளெல்லாம் கட்டி வைத்து உதைத்தது மட்டுமல்ல; போலீசை வரவழைத்து அத்தொழிலாளி மீது பொய்க் குற்றங்களைச் சாட்டி ஒப்படைத்துள்ளார். இவரது அக்கிரமம் சொல்ல முடியாத அளவு பெருகி வருகிறது. இது கண்டு குந்தாவிலுள்ள தொழிலாளர்கள் ஆத்திரமுற்றுள்ளனர்.

## பீடித் தொழிலாளர் போராட்டம் தொடருகிறது

திருச்சி, செப். 8—

திருச்சியில் 20000 பீடித்தொழிலாளர்கள் மறியல் போராட்டம் அமைதியான முறையில் நடைபெற்று வருகிறது. தொழிலாளர்கள் அனைவரும் உறுதியுடன் போராட்டத்தில் ஈடுபட்டுள்ளனர். (க. கி.)

**காரைக்காலில்**

## சர்வகட்சி கூட்டணித் தலைவர்கள் உண்ணுவிரதம்

காரைக்கால், செப். 6—

அரசாங்க நியாய விலைக் கடைகள் திறந்து, அரிசி போட மறுப்பதைக் கண்டித்து, 6-9-58 காலை 10 மணியிலிருந்து தோழர் சுப்ரமணியம் (காரியதரிசி கம்யூ.கட்சி) எஸ். முபாரக் (காரியதரிசி திராவிட முன்னேற்றக் கழகம்) காலவரையற்ற உண்ணுவிரதம் மேற்கொண்டிருக்கின்றனர். "காரை முரசு" ஆசிரியர் வீ. தங்கவேல் உண்ணுவிரதத்தைத் துவக்கி வைத்தார். உண்ணுவிரதிகள் நகர மக்கள்புடைசூழ பிரதான வீதிகளின் வழியே ஊர்வலம் வந்தனர். மக்கள் மத்தியில் பெரும் பரபரப்பு ஏற்பட்டிருக்கிறது. புதுவை ராஜ்ய கமிஷனர், ராஜ்ய காங்கிரஸ், எதிர்க்கட்சித் தலைவர் வ. சுப்பையா முதலியோர்களுக்கு சர்வ கட்சி கூட்டணி சார்பில் தந்திகள் அடிக்கப்பட்டுள்ளன.

(க-கி.)

# தேபருக்கு, கேரள முதலமைச்சர் ஆணித்தரமான பதில்

## குற்றச்சாட்டுகளை நிரூபியுங்கள்

## யார் இரட்டை நீதி அனுஷ்டிப்பது?

### கம்யூனிஸ்டுகளுக்கு உத்தியோகமில்லை என்று கூறும் காங்கிரசா?

### அல்லது எல்லோருக்கும் உரிமை வழங்கியிருக்கும் கம்யூனிஸ்டா?

திருவனந்தபுரம், செப். 8—

"இந்தியாவில் எல்லா ராஜ்யங்களிலும் சர்க்கார்களும், அரசியல் கட்சிகளும் எத்தகைய பண்புகளையும், சீலங்களையும் பின்பற்றவேண்டும் என்பதுபற்றி காங்கிரஸ் அக்ராசனரோடு விவாதிப்பதற்கு நான் தயாராக இருக்கிறேன். இதை நேற்று காங்கிரஸ் தலைவர் தேபரைச் சந்தித்தபோது அவரிடம் தெளிவாகக் கூறினேன்."

இவ்விதம் கேரள கம்யூனிஸ்ட் முதலமைச்சர் இ. எம். எஸ். நம்பூதிரிபாட், தேபரோடு தாம் பேச்சு வார்த்தைகள் நடத்தியது பற்றி வெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார். அந்த அறிக்கையில் அவர் மேலும் தெரிவித்திருப்பதாவது:

"கம்யூனிஸ்டுகள் கேரளத்தில் இரட்டை நீதி அனுஷ்டிப்பதாகவும், நிர்வாகத்தில் தலையிடுவதாகவும் காங்கிரஸ்காரர்கள் குற்றம் சாட்டுகிறார்கள். அப்படியானால் கேரளத்தில் நீங்கள் எத்தகைய பண்பையும், சீலத்தையும் அனுஷ்டிக்க வேண்டும் என்று சொல்கிறீர்களோ அவற்றை இதர 13 ராஜ்யங்களிலுள்ள காங்கிரஸும், காங்கிரஸ் சர்க்கார்களும் பின்பற்றவேண்டும். இதற்கு நீங்கள் இணங்கத் தயாரா? என்று தேபரிடம் நான் கூறினேன்.

**எங்கே இரட்டை நீதி?**

தேபர் தமது காங்கிரஸ் கட்சி அப்பழுக்கற்ற சுத்த சுயம்பிரகாசமான கட்சிபோலவும் கேரள சர்க்கார் மட்டும் தீமையே உருண்டு திரண்டு அவதாரமெடுத்திருப்பது போலவும் பேசுவதும் நடந்துகொள்வதும் முறையல்ல. இந்தப் போக்கு ஒன்றே உண்மையில் இரட்டைநீதிஅனுஷ்டிப்பவர்கள் கம்யூனிஸ்டுகள் அல்ல; காங்கிரஸ்காரர்கள்தான் என்பதை நிரூபிக்கிறது. இந்திய தேசிய காங்கிரஸ்தான் கம்யூனிஸ்ட் கட்சிக்கு ஒரு நீதியும் காங்கிரஸ் கட்சிக்கு ஒரு நீதியும் என்ற பாரபட்ச முறையில் நடந்துகொள்கிறது.

மத்திய சர்க்காருக்கும் ராஜ்ய சர்க்கார்களுக்குமிடையே சௌஜன்யமான உறவு அபிவிருத்தியடைய வேண்டும் என்று தேபர் கூறினார். இதை நான் பூரணமாக ஒப்புக்கொண்டேன். ஆனால் வருந்தத் தக்க ஒரு விஷயமென்னவென்றால், தேபரின் கட்சியைச் சேர்ந்த அவரது நண்பர்கள் கேரளத்தில் செய்துவரும் அபத்தப் பிரச்சாரங்களும், நீதி நெறியற்ற செயல்களும் இத்தகைய சமூக உறவுகள் அபிவிருத்தி அடைவதற்கு உதவிகரமாகஇருக்காது. எனவே இந் நிலையில் அவரது கேரள விஜயம் எந்த அளவுக்கு ஒத்துப் போகும்படி தமது சகாக்களுக்கு அவர் புத்திமதி கூறியுள்ளார் என்று தெரியவில்லை. எது எப்படியிருந்தாலும் கேரளத்துக்கும் மத்திய சர்க்காருக்குமிடையே சௌஜன்ய உறவுகள் நீடிக்க சகல முயற்சிகளையும் கேரள சர்க்கார் செய்யும் என்பதை நான் தேபரிடம் கூறினேன்.

**இரண்டு விஷயங்கள்**

தேபர் என்னிடம் கூறும்போது கம்யூனிஸ்டுகள் தங்களுக்கு ஒரு நீதியும், கம்யூனிஸ்டு அல்லாதவர்களுக்கு ஒரு நீதியும் அனுஷ்டிக்கிறார்கள்; நிர்வாக விஷயங்களில் கம்யூனிஸ்ட் கட்சி தலையிடுகிறது என்ற கண்ணோட்டம் தமக்கு ஏற்பட்டிருப்பதாகக் கூறினர். நான் அவரிடம் கூறினேன் அப்படியானால் இந்தக் கண்ணோட்டம் ஏற்பட்டதற்கான முழு விபரங்களையும் சம்பவங்களையும் என்னிடம் கூறுங்கள் என்றேன். அப்படி செய்யாமல் 'தங்களுக்குக் கண்ணோட்டம்' ஏற்பட்டிருப்பதாக மேலெழுந்த வாரியாக காங்கிரஸ்காரர்கள் பேசிக்கொண்டு திரிவது அழகல்ல. இவற்றிற்கெல்லாம் தகுந்த ஆதாரங்கள் இருந்தால் நிரூபியுங்கள் என்று அவரிடம் கேட்டேன்.

இன்னும் சர்க்கார் உத்தியோகங்களுக்கு ஆட்களை நியமிப்பதிலும் உத்தியோகப் பற்றற்ற கமிட்டிகளுக்கு பிரதிநிதிகளை நியமிப்பதிலும் முந்திய சர்க்கார்கள் செய்ததற்கும் இப்போதைய கம்யூனிஸ்ட் சர்க்கார் செய்து வருவதற்கும் உள்ள வித்தியாசத்தை அவரிடம் எடுத்துக் கூறினேன்.

**நெடுநாளைய அநீதி**

கேரளத்தில் சர்க்கார் உத்தியோகங்களில் கம்யூனிஸ்டுகளை அனுமதிக்கக் கூடாது என்ற ஒரு தடை முன்பிருந்தது. அதை நாங்கள் பதவிக்கு வந்ததும் ரத்து செய்தோம். இதன்மூலம் எல்லா கட்சியினரோடு கம்யூனிஸ்டுகளும் சரிநிகர் சமானமானவர்தான். காங்கிரஸ்காரர்களுக்கோ அல்லது வேறு எதிர்க்கட்சிகாரர்களுக்கோ உள்ள உரிமை அவர்களுக்கும் உண்டு என்று செய்தோம். இதில் என்ன தவறு? இதுதான் இரட்டை நீதியா?

இன்றுகூட காங்கிரஸ் ராஜ்யங்களிலே கம்யூனிஸ்டுகளுக்கு சர்க்கார் பதவி கொடுக்கக் கூடாது என்று ஒரு உத்திரவு இருக்கிறது என்று நினைக்கிறேன். இப்படி தங்கள் ஆட்சியில் ஆளுக்கொரு நீதி அனுஷ்டிப்பவர்கள் கம்யூனிஸ்டுகளைப் பார்த்து இரட்டை நீதிக்காரர்கள் என்று குற்றம் சாட்டுவதில் என்ன அர்த்தம் இருக்கிறது. இதை தேபருக்கு சுட்டிக்காட்டினேன்.

அதிகாரப் பற்றற்ற கமிட்டிகளைப் பொறுத்தவரையில் சட்டசபையில் காங்கிரசுக்குள்ள ஸ்தானங்கள் அடிப்படையில் அவர்களுக்கு இந்தக் கமிட்டிகளில் பிரதிநிதித்துவம் அளிக்கவில்லை என்று சொல்ல முடியுமா? காங்கிரசுக்கு மட்டுமல்ல எல்லாக் கட்சிகளுக்குமே உரிய இடமளித்திருக்கிறோம்.

இது ஒருபுறமிருக்க இன்று கேரளத்தில் திட்டமிட்டு பிரச்சாரம் செய்து ஒரு தவறான கண்ணோட்டம் ஏற்படமுயற்சிசெய்து வருகிறார்கள். அதாவது கேரளசர்க்கார் நிர்வாக விஷயத்தில் எடுக்கக்கூடிய ஒவ்வொரு நடவடிக்கையும் மத்திய சர்க்காரால் புனராலோசனை செய்யப்பட நேரிடலாம் அல்லது ரத்து செய்ய நேரிடலாம். ஆகவே சர்க்கார் அதிகாரிகள் கேரள கம்யூனிஸ்ட் மந்திரி சபையின் உத்திரவுகளுக்குக் கீழ்ப்படிய வேண்டியதில்லை என்ற ரீதியில் இன்று காங்கிரஸ் தலைவர்கள் கேரளத்தில் பகிரங்கமாகப் பிரச்சாரம் செய்து வருகிறார்கள்.

இதை தேபரிடம் நான் எடுத்துக்காட்டி இந்த நிலை தொடர்ந்து நீடிக்குமானால் கேரள சர்க்காருக்கும் அதன் உத்தியோகஸ்தர்கள், ஊழியர்களுக்கிடையே உள்ள உறவிலும் மத்திய சர்க்கார் ராஜ்ய சர்க்காருக்கிடையே உள்ள உறவிலும் விரும்பத்தகாத நிலை ஏற்படுவதற்கான வழிவகையையே செய்யும் என்று கூறினேன். இதுதான் காங்கிரஸ் கட்சி நிர்வாகத்தில் தலையிடாமலிருக்கிறது என்பதற்கு தேபர் கூறக்கூடிய முன்னுதாரணமாக இருக்குமோ என்று ஆச்சரியப்படுகிறேன்.

இது நிற்க. தொழில் விவசாயத் துறைகளில் கம்யூனிஸ்ட் சர்க்கார் கணிசமாக முன்னேற்றம் காட்டவில்லை என்று தேபர் கூறினார். ஆனால் அதே சமயம் 1951–56-ம் வருடங்களில் காங்கிரஸ் பி. சோ. ஆட்சி காலத்தில் இந்தத் துறைகளில் மிக மிக பிற்போக்கான நிலை இருந்ததே அதைப்பற்றி எதுவும் கூற தேபருக்கு ஒரு வார்த்தைகூட கிடைக்காது போய்விட்டதோ என்னவோ!"

இவ்விதம் இ. எம். எஸ். நம்பூதிரிபாட் தமது அறிக்கையில் கூறியுள்ளார்.

---

## கெடுபிடி போரை நிறுத்தி தேபர் உபதேசிக்கட்டும்!

**கிருஷ்ணய்யர் பேட்டி**

திருவனந்தபுரம், செப். 8— கேரளத்தில் கெடுபிடிப்போரையும், புனிதப்போர் அரசியலையும் தேபருடைய உபதேசத்தால் குறைக்க முடியுமானால் அதுவே நல்லது என்று தேபரிடம் தாம் கூறியதாக கேரள சட்ட மந்திரி வி. ஆர். கிருஷ்ணய்யர் கூறினார்.

தேபருடன் நடத்திய பேச்சு வார்த்தைகள் திருப்திகரமானதா என்று நிருபர் கேட்ட கேள்விக்குப் பதிலளித்த கிருஷ்ணய்யர் தான் எதையும் எதிர்பார்த்துப் போகவில்லை என்றும் எனவே எவ்வித ஏமாற்றமும் ஏற்பட வழியில்லை எனவும் அவர் குறிப்பிட்டார். (பி.டி.ஐ.)

## சம்பளம் பெறும் ஊழியர் சாத்யமில்லை என்கிறார் தேபர்

கள்ளிக்கோட்டை, செப். 8— காங்கிரஸ் ஊழியர்கள் வீடு வீடாகச் சென்று மக்களை அணுகி மக்களுடன் தொடர்பு வைத்துக் கொள்ள வேண்டும் என்று காங்கிரஸ் அக்ராசனர் கேரள காங்கிரஸ் தலைவர்களுக்கு உபதேசித்தார். சம்பளம் பெறும் ஊழியர்கள் கிடைக்க முடியாது என்றும் சுயமாகச் சொந்தச் செலவில் சேவை புரியும் ஆட்களே வேண்டும் என்றும் அவர் கூறினார்.

**பாக். சமஸ்கிருத அறிஞர்கள்**

டாக்கா, செப். 7— கிழக்கு வங்காள சரஸ்வதி சமாஜத்தின் எண்பதாவது பட்டமளிப்பு விழாவில் 40 அறிஞர்களுக்குப் பட்டமளிக்கப்பட்டது. தலைமை வகித்த கி. பாகிஸ்தான் கவர்னர் சுல்தானுடீன் அகமத் சுவகாசர்கள் அமைமேதுறும் உலகில் எளிய வாழ்வு உயர்ந்த சிந்தனைக்கு இந்த அறிஞர்கள் எடுத்துக்காட்டாக இருப்பதைப் பாராட்டினார்.

## உணவு நெருக்கடி ஒரு தேசியப் பிரச்சினை

### நேருவின் முயற்சிபற்றி கிருபளானி கருத்து

**உ. பி.யில் கைதுகள் சட்டவிரோதமென்கிறார்**

அலகாபாத், செப். 8— உணவுப் பிரச்னை ஒரு தேசிய நெருக்கடி என்ற அடிப்படையில் கவனிக்கவேண்டுமென்றும், பிரதம மந்திரியால் அறிவிக்கப்பட்ட கொள்கையையொட்டி மாகாண அரசாங்கங்கள் நடைமுறைகளை வகுக்கவேண்டுமென்றும் ஆசார்ய கிருபளானி இன்று இங்கு கூறினார்.

பத்திரிகையாளர் மகாநாடொன்றில் பேசுகையில், ஆளும் கட்சியும் எதிர்க் கட்சிகளும் ஒன்று சேர்ந்து இந்த உணவு நெருக்கடியைச் சமாளிக்க வழி முறைகளைக் காணவேண்டும் என்று அவர் வற்புறுத்தினார்.

ஒருகட்சியை சேர்ந்தவனென்ற முறையிலன்றி ஒரு பழைய ஊழியன் என்ற நிலையிலேயேதான் இதைக்கூறுவதாகவும் அவர் கூறினார். தான் கூறுவதை ஆளும்கட்சியும் எதிர்க்கட்சிகளும் ஏற்றுக்கொள்வதும் மறுப்பதும் அவைகளைப் பொறுத்தது என்றார். மக்கள் சபையிலுள்ள எதிர்க் கட்சிகளையெல்லாம் ஒன்று திரட்டி இந்தத் தேசிய நெருக்கடியை சமாளிக்கப் பிரதம மந்திரி செவ்வழியொன்றைச் செய்திருப்பதற்குத் தான் மகிழ்வதாக அவர் கூறினார்.

இந்த உணவு நெருக்கடிக்குக் காரணம் பெரும்பாலும் அரசாங்கமே என்றும், இந்த நெருக்கடி நிலைமையை எதிர்க்கட்சிகள் பயன்படுத்திக் கொள்வதாகக் கூறப்பட்டால் அதில் குறைபட்டுக்கொள்ள ஒன்றுமில்லை என்றும் அவர் கூறினார்.

உ. பி.யில் பி. சோ. தொண்டர்கள் கைது செய்யப்பட்டது பற்றிக் குறிப்பிடுகையில், அந்நிய ஆட்சியின்போது பின்பற்றிய முறைகளை உ. பி. அரசாங்கம் பின்பற்றுகிறது என்று கூறப்படுகிறது. கைது செய்யப்பட்டது சட்டவிரோதமானது என்றார். இருப்பினும் நீதிமன்றத்தில் நம் தொண்டர்கள் வேண்டப் போவதில்லை என்றார்.

---



---

## உத்திர பிரதேச சட்ட சபையில் போலீஸ் தலையீடு

### 15 எம். எல். ஏ.க்கள் வெளியேற்றப்பட்டனர்

### சர்க்காரின் உணவு கொள்கைக்கு ஆட்சேபம்

**சபாநாயகர்-எதிர்க் கட்சி தலைவர் வாக்குவாதம்**

லக்ஷ்மணபுரி, செப். 8— இன்று உத்திரப்பிரதேச சட்டசபையிலிருந்து எதிர்கட்சி சோஷலிஸ்ட் தலைவர் ராஜ் நாராயணனை வெளியேற்ற சபாநாயகரின் ஆணை பேரில் மாகாண ஆயுத போலீஸ் படையினர் தருவிக்கப்பட்டனர். சபையில் பெரும் அமளி ஏற்பட்டது. சபாநாயகர் முதலில் பத்து நிமிஷம் சட்டசபை கூட்டத்தை ஒத்திவைத்தார்; பின்னால் இடைவேளைக்கு முன் நேரம் முழுவதிலும் சபையை ஒத்திவைக்க வேண்டியதாயிற்று.

கம்யூனிஸ்ட் தலைவர் ஜார்கண்ட்ராய், மற்றிரு தலைவர்களான திரிலோக்சிங், யாதவேந்திரதத் தூபே உள்பட எதிர் கட்சியினர் பன்னிரண்டு பேர் கைது செய்யப்பட்டதாக சபாநாயகர் அறிவித்ததும், எதிர்க்கட்சித் தலைவர் ராஜ நாராயணன் எழுந்து, பேச்சு சுதந்திரத்தை அரசியல் சட்டம் அளித்திருக்கையில் இ. பி. கோ. 151 வது ஷரத்து பிரகாரம் எதிர்க் கட்சியினர் பன்னிருவர் ஏன் கைது செய்யப்பட்டனரென்று கேட்டார்.

உணவு தானியம் பதுக்குவோர் மீது நடவடிக்கை எடுத்து அவர்களை ஏன் சர்க்கார் தண்டிக்காமலிருக்கிறதென்று ராஜ் நாராயண் கேட்டார்.

இந்நிலையில் சபாநாயகர் குறுக்கிட்டார். "முதல் அமைச்சர் விரும்பினால் எதிர்க்கட்சித் தலைவர் ராஜ் நாராயணன் குறிப்பிட்ட முதல் விஷயத்திற்கு பதில் கூறலாம் என்றார்.

**பதில் கூற முதல் அமைச்சர் மறுப்பு**

முதல் அமைச்சர் டாக்டர் சம்பூரணனந்தர் பதிலளிக்கையில் "ஸ்தல அதிகாரிகள் தகுந்த நடவடிக்கை எடுத்துள்ளனர். ஆகவே இந்த விஷயத்தில் சர்க்கார் எதுவும் செய்வதற்குமில்லை. சொல்வதற்குமில்லை" என்றார்.

ராஜ் நாராயணன் விடவில்லை. "இந்த சர்க்கார் பிடிவாத குணமுள்ளதாயிருக்கிறது. உணவு விஷயத்தில் உதவாக்கரை கொள்கையை அனுசரித்தும் வருகிறது. இதை ஆட்சேபித்து, நாங்கள் சபையிலிருந்து வெளியேற தீர்மானித்திருக்கிறோம். ஆனால் நான் ஒன்றை வற்புறுத்திக் கூறுவேன். மக்களின் உரிமைகளை சர்க்கார் லட்சியம் செய்யவில்லை. அந்த உரிமைகள் மீது சர்க்கார் ஆணவத்துடன் மிதித்து செல்கிறது என்றார்.

சபாநாயகர் குறுக்கிட்டு, "நீங்கள் சபையை ஒரு பிரசார மேடையாக்கிவிடக்கூடாது. உட்கார வேண்டும் என்று ஆணையிட்டார்.

மக்களின் நியாயமான கிளர்ச்சி அடக்க சர்க்கார் அடக்குமுறையைக் கையாளுகிறதென்று ராஜ் நாராயண் கண்டித்து பேசிய வண்ணமிருந்தார்.

பேச்சை நிறுத்தாவிட்டால் வெளியேற்றுவதாக சபாநாயகர் கூறினார்.

ராஜ் நாராயண் பேச்சை நிறுத்தவில்லை. சபையிலிருந்து வெளியேறவும் மறுத்தார்.

இதன்பேரில் அவர் (ராஜ்நாராயண்) 15 நாட்கள் நடவடிக்கைகளில் கலந்து கொள்ளக்கூடாதென தடைவிதிப்பதாக முதல் அமைச்சர் ஒரு தீர்மானம் கொண்டு வந்தார்.

ராஜ்நாராயண் பதிலுக்கு ஒரு தீர்மானம் பிரேரித்தார். முதல் அமைச்சர் சபையில் ஒரு மாதம் கலந்து கொள்ளக் கூடாதென்பதும் முதல் அமைச்சர் ராஜிநாமாச் செய்ய வேண்டுமென்பதுமே அத்தீர்மானம்.

முதல் மந்திரியின் தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்டு நிறைவேறியதாக அறிவிக்கப்பட்டது. ஓட்டுகளைக் கணக்கிட வேண்டுமென்று ராஜ் நாராயண் வற்புறுத்தினார்.

இதன்பேரில், சபாநாயகர் 10நிமிஷம் சபையை ஒத்திவைத்தார். பிறகு சபை கூடியது, அமளி ஓயவில்லை.

**15 பேர் வெளியேற்றம்**

சபாநாயகரின் ஆணை பேரில் ராஜ் நாராயணனும் அவரது 14 சகாக்களும் ஆயுத போலீசாரால் சட்டசபையிலிருந்து வெளியேற்றப்பட்டனர். உணவு கிளர்ச்சி சம்பந்தமாக தலைவர்கள் கைது செய்யப்பட்டதுபற்றிய ஏழு அவசர தீர்மானங்களை சபாநாயகர் நிராகரித்தார்.

**எம். எல். ஏ.க்களுக்கு போலீஸ் உதை**

போலீஸ் சில எம். எல். ஏ.க்களை காலால் உதைத்து வெளியேற்றியதாக சபாநாயகரிடம் புகார் செய்யப்பட்டது.

---

## அமெரிக்கர்முன் இந்தியரை இழிவுபடுத்தல் சர்க்கார் கொள்கையா?

### மொரார்ஜியின் அதிகப்பிரசங்கத்தனத்திற்கு கம்யூனிஸ்ட் தலைவர்கள் கண்டனம்

**ராஜ்ய சபையில் ஆவேசமான விவாதம்**

'டைம்' என்ற அமெரிக்க சஞ்சிகைக்கு நிதி மந்திரி மொரார்ஜி தேசாய் அளித்த பேட்டி குறித்து இன்று ராஜ்ய சபையில் பலத்த ஆட்சேபமும், உக்கிரமான கேள்விகளும் எழுந்தன. சரமாரியாக பிரதம மந்திரியைக் கேள்விகள் கேட்டனர்.

பிரதமர் நேரு பதிலளிக்கையில் பகிரங்கமாக பேசும்போது யாரும் நாகாக்கவேண்டும். சிறப்பாக மந்திரிகள் நா காத்தல் மிகவும் அவசியம். ஆனால் இவ்விஷயத்தில் திட்டவட்டமான விதிகளை விதிப்பதென்பது சாத்தியமில்லை

எந்த சந்தர்ப்பத்தில் மொரார்ஜி தேசாய் அவ்வித அபிப்பிராயங்களைத் தெரிவித்தாரென்பதை நிச்சயிக்க அவர் திரும்பும் வரையில் காத்திருக்கவேண்டும். அவர் கூறிய பல விஷயங்களில் எனக்கு அபிப்பிராய பேதமுண்டு. கர்ப்பத்தடை விஷயமாக அவர் கூறியது எனக்கு உடன்பாடே அல்ல."

பிரதமரின் பதிலால் அங்கத்தினர்கள் திருப்தியடையவில்லை. தேச மக்களைப் பற்றியும் பிரதம மந்திரியைப் பற்றியும் அவ்விதம் ஒரு மந்திரி பேசுவது அரசியல் சட்டப்படி ஒழுங்காகுமாவென்று கம்யூனிஸ்ட் கட்சி ராஜ்ய சபை உறுப்பினர் பூபேஷ் குப்தாவும் குன்ஸ்ருவும்பல முறைகேட்டனர்.

நேரான பதிலை நேருஜி தரவில்லை.

பூபேஷ் குப்தாவே ஒரு அவசர கேள்வி மூலம் இந்த விஷயத்தை பிரஸ்தாபித்தார்.

பிரதமர்:—அந்தப் பேட்டியில் கண்ட கருத்துக்கள் நிதி மந்திரியின் சொந்தக் கருத்துக்களே

பூபேஷ் குப்தா:—பொருளாதார உதவி கோரி அமெரிக்காவுக்கு இந்தியாவின் நிதிமந்திரி புறப்படும் முன்பு இவ்வித பேட்டிகளை அமெரிக்க பத்திரிகைகளுக்கு அளிப்பது சர்க்காரின் கொள்கையா என்றுதான் கேட்கிறேன்?

நேரு:—அவ்வித கொள்கை எதுவுமில்லை.

## உணவு நெருக்கடிக்கு சர்வகட்சி முயற்சி

கல்கத்தா, செப். 7— உணவு நெருக்கடிக்குப் பரிகாரம் காண அரசியல் கட்சிகள் அனைத்தும் ஒத்துழைக்கவேண்டுமென்று பிரதமர் நேரு அறிவித்திருப்பதை வங்க பிரஜா சோஷலிஸ்ட் கட்சி அக்ராசனர் டாக்டர் பி. சி. கோஷ் வரவேற்றார். நிருபர்களுக்குப் பதிலளிக்கையில், வங்க சர்க்காரின் போக்கு மக்களின் நலனுக்கு தீங்கு இழைப்பதாக இருக்கிறதென்றும் டாக்டர் கோஷ் கண்டித்தார்.

## நூல் விலை ஏறியது ஏன்?

சென்னை, செப். 5— சென்னை ராஜ்யத்தில் 106 ஸ்பின்னிங் மில்கள் இருப்பதாக அமைச்சர் ஆர் வெங்கட்ராமன் சட்டசபையில் ஒரு கேள்விக்கு பதிலளித்தார்.

திரு. எம். கல்யாணசுந்தரம் எழுந்து, "தேவையான நூல் வைத்துக்கொண்டு மீதி நூல் தான் ஏற்றுமதியாவதாகத் தெரிவிக்கப்பட்டது. அப்படியிருக்க ஏற்றுமதியான பின்னரும் நூல் விலை ஏறியிருக்கிறதே ஏன்?" என்று கேட்டார். தனிக்கேள்வி போடுமாறு அமைச்சர் கூறினார்.

---

## செய்தித் தாள் கோட்டா குறைப்பு நீடிக்குமாம்!

### துஷ்பிரயோகம் பற்றி வர்த்தக மந்திரி மௌனம்

புதுடில்லி, செப். 8— நியூஸ் பிரின்ட் (பத்திரிகை காகிதம்) கொடுப்பதில் பதினைந்து சத வீத வெட்டு சர்க்காரால் ஏற்படுத்தப்பட்டிருப்பது ஞாபகமிருக்கும். அந்த வெட்டை ரத்து செய்வது சாத்தியமில்லை என்று ராஜ்ய சபையில் வர்த்தக தொழில் மந்திரி லால் பகதூர் அறிவித்தார். கோட்டா குறைப்பு குறைந்தது சிறிது காலமாவது நீடிக்குமென்றார்.

1958 ஜூன், ஜூலை மாதங்களில் விசேஷ முறையில் நியூஸ் பிரின்ட் பற்றாக் குறை இல்லையென்றும் 1957–58ல் 61,000 டன் இறக்குமதி செய்யப்பட்டதென்றும் 1958 ஏப்ரல்—ஜூன் மாதங்களில் 10,800 டன் இறக்குமதியாயிற்றென்றும் 1958–59ல் இறக்குமதி யாகக்கூடிய மொத்த அளவை மதிப்பிடுவது இப்பொழுது சாத்தியமல்லவென்றும் உதவி மந்திரி தெரிவித்தார்.

சில பத்திரிகையாளர்கள் தங்கள் தேவைக்கு அதிகப்படியாக நியூஸ் பிரின்ட்டை இறக்குமதி செய்து பத்திரிகைகள் சம்பந்தப்படாத இதர காரியங்களுக்காக உபயோகித்துள்ளன வென்பது சர்க்காருக்குத் தெரியுமா வென்று ஒரு உறுப்பினர் கேட்டார்.

வர்த்தக மந்திரி சொன்ன பதில்: பத்திரிகைகள் பிரசுரிப்பவர்களுக்கு லைசென்ஸ்கள் வழங்கப்படுகின்றன. பத்திரிகை விற்பனை, பக்கங்களின் அளவு என்ற இரண்டு விஷயங்களின் அடிப்படையில் பத்திரிகைகளின் தேவைகள் கவனிக்கப்பட்டு, அதன்படி கோட்டாக்கள் வழங்கப்படுகின்றன.

பத்து டன்னுக்குக் குறைந்த கோட்டா அனுமதிக்கப்பட்ட பத்திரிகைகளின் கோட்டா குறைக்கப்படவில்லை. ஸ்டேட் டிரேடிங் கார்ப்பரேஷனுடைய ரூபாய் கணக்கிட்டு இப்பொழுது நியூஸ் பிரின்ட்டை இறக்குமதி செய்து வருகிறது. அந்த இறக்குமதிகள் சிறு பத்திரிகைகளின் தேவைகளுக்குப் பயன்படுத்தப்படும்.

இந்த ஆண்டு நேபா மில்களில் 20,000 டன் உற்பத்தி ஆகுமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

## குடியேற்றத் தடைக்கு பிவான் எதிர்ப்பு

லண்டன், செப். 8— இங்கிலாந்திற்குள் வெள்ளை நிறத்தவரல்லாத வேறுநிறத்தவர்கள் குடியேறுவதைத் தடைசெய்வது தோல்வி மனப்பான்மையை காட்டுகிறது. அதோடு இது அபாயகரமானதும்கூட. காமன் வெல்த் நாடுகளுக்கும் பிரிட்டனுக்கும் இடையே உள்ளஉறவை பெரிதும் பாதிப்பதாகும் என்று பிரிட்டிஷ் தொழிற்கட்சிப் பிரமுகர் பிவான் எதிர்ப்புத் தெரிவித்தார்.

**நடக்க இருப்பவை**

பட்டுக்கோட்டை: 10-9-58 புதன்கிழமை மாலை 6 மணிக்கு காசாங்குளம் வடகரையில் கம்யூனிஸ்ட் கட்சிப் பொதுக்கூட்டம்: தமிழ்நாடு கம்யூனிஸ்ட் தலைவர்கள் எம். ஆர். வெங்கட்ராமன், மணலி கந்தசாமி, என். சங்கரய்யா ஆகியோர் பேசுகின்றனர்.

---

## மார்க்கெட் நிலவரம்

சென்னை, செப். 9—

| | | |
|---|---|---|
| சவரன் | ரூ. | 73– 0–0 |
| தங்கம் (ரெடி) | ரூ. | 109– 8–0 |
| முதை தங்கம் | ரூ. | 108– 0–0 |
| வெள்ளி 100 தோலா எடை | | 189–0–0 |
| வெள்ளி 1 ரூ. எடை | | 1–15–0 |

**மணிலா பயறு**

| | |
|---|---|
| 531 ராத்தல் கொண்ட பாரம் 1 க்கு கோடை சரக்கு | 194 மு 195 |

**மணிலா எண்ணெய்**

| | |
|---|---|
| 500 ரா. கொண்ட பாரம் 1-க்கு எக்ஸ்பெல்லர் ரெடி மதராஸ் கிடங்கு டெலிவரி (3FFA) (மொத்த விலை) ரெடி | 360-00 |
| செப்டம்பர் | 353-00 |
| அக்டோபர் | 341-00 |
| நவம்பர் | 328-00 |

**விளக்கெண்ணெய்**

| | |
|---|---|
| (500 ரா. பாரம் 1-க்கு) மதராஸ் கிடங்கு டெலிவரி திருப்பத்தூர் | 330-00 |
| சேலம் "தாமரை அன்னம்" (37½ ரா.) (டின் 1-க்கு) | 26-50 |

**தேங்காய் எண்ணெய்**

| | |
|---|---|
| எம். எஸ். மார்க்கு | 40-75 |
| அம்பு மார்க் | 39-75 |
| ராஜா | 40-00 |

**சர்க்கரை**

| | |
|---|---|
| சாமல்கோட்டை | 106-75 |
| உய்யூரு | 106-25 |



**நன்றி அறிவிப்பு**

1-9-58ந் தேதி நடந்த எங்கள் திருமணத்திற்கு நேரில் வந்து நல்லாசி கூறியும், போற்றற்குரிய பரிசுகள் வழங்கிய நண்பர்களுக்கும், 'தமிழர் திருமணம்' பற்றி அரிய சொற்பொழிவாற்றிய திரு. S. கிருஷ்ணன் B.A., B.L., அட்வகேட் அவர்களுக்கும் எங்களின் உள்ளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

மணமக்கள்,
T. R. முத்துசாமி
பாக்கியவதி

தொட்டியபாளையம்
(via) பவானி—4-9-58

---

**நீர்மட்டம்**

சென்னை, செப். 8— மேட்டூர்: நீர் நிரம்பிவிட்டது. பெரியார்: 42·85 அடி. பாபநாசம்: 114·5 அடி.




**மதராஸ் 1**
**11—9—58**

319·1 மீ. (940 கி. சை.)

காலை: 7-00 துதிப்பாடல்கள்; 7.10 நிகழ்ச்சிக் குறிப்புகள், வானிலை அறிவிப்பு; 7-15 தமிழில் செய்தி; 7-30 சுசீலாசஞராகவன் பாட்டு; 8-15 ஒலிபரப்பு முடிவு.

12-30 நடுத்தரப் பள்ளிகளுக்கு; 1-00 மஹிளா மண்டலி; 1-30 பாட்டுக்கொரு புலவன்; 1.40 ஹிந்தியில் செய்தி; 1.50 கதம்பம்; 2.00 தமிழில்செய்தி; 2-10 உயர்தரப் பள்ளிகளுக்கு; 2-40 வானிலை அறிவிப்பு, ஒலிபரப்பு முடிவு.

மாலை: 5-30 கே. எல். ஜகந்நாதன் நாதஸ்வரம்; 6-05 பிராந்தியச் செய்திகள்; 6-15 பூதான் இயக்கம் பேச்சு; 6-25 சுசீலாசஞராகவன் பாட்டு; 6-45 எம் எஸ். சிவராமன் பாட்டு; 7-15 தமிழில் செய்தி; 7-30 படிக்கும் பழக்கம்; 7-40 இடைவேளை; 7-35 பாலக்காடு கே. வி. நாராயணஸ்வாமி பாட்டு; 8-30 ஒலிப்பதிவுகள்; 8-40 கன்னட தேச நாட்டுப் பாடல்கள்; 8-55 இடைவேளை; 9-00 ஹிந்துஸ்தானி சங்கீதம்; 9-30 அகில பாரதநாடக நிகழ்ச்சி; 10-00 [illegible] இசை: 10-30 வானிலை அறிவிப்பு, ஒலிபரப்பு முடிவு.

**மதராஸ் 2**
**11—9—58**

211·3 மீ (1,420 கி. சை.)
41 32 மீ. (7,260 கி. சை.)

காலை: 7-00 தெலுங்கில் செய்தி; 7-15 ஆ. இ. ரே. வாத்ய வித்வான்கள்; 7 30 மதராஸ் 1-ல் உள்ளபடி; 8-00 ஆங்கிலத்தில் செய்தி; 8-15 ஒலிபரப்பு முடிவு.

211·3 மீ. (1,420 கி. சை.)
31·28 மீ. (9,590 கி. சை.)

12.00 தொழிலாளர்களுக்கு; 12-30 ஒலிபரப்பு முடிவு.

1-00 கதம்பம்; 1-30 ஆங்கிலத்தில் செய்தி; 1-40 சௌதாமினி; 1.50 தெலுங்கில் செய்தி; 2-00 பாரதி; 2-20 உயர்தரப்பள்ளிகளுக்கு (தெலுங்கு) 2-50 விஜயவாடாவில் உள்ளபடி; 3-00 நடுத்தரப்பள்ளிகளுக்கு (தெலுங்கு) 3 30 வானிலை அறிவிப்பு; ஒலிபரப்பு முடிவு.

211 3 மீ. (1,420 கி. சை.)
60 98 மீ. (4,920 கி. சை.)

மாலை: 5-00 ஐரோப்பிய சங்கீதம்; 5-30 அறிவிப்புகள், விலைவாசிகள் (ஆங்கிலம்) 6.00 ஆங்கிலத்தில் செய்தி; 6-05 பிராந்திய வார்த்தலு; 6-15 கிராமஸ்துல கார்யக்ரமமு; 7-00 தெலுங்கில் செய்தி; 7.15 விஜயவாடாவில் உள்ளபடி; 7-30 கோட்டு வாத்யம் ஆ. இ. ரே. வித்வான்; 7-45 மதராஸ 1-ல் உள்ளபடி; 8-30 Radio News Reel (Relay from Delhi) 8-40 மதராஸ் 1-ல் உள்ளபடி; 9-00 ஆங்கிலத்தில் செய்தி; 9-15 To Sing of Freedom Talk by Prof. P Mahadevan on the occasion of Birth anniversary of Poet Bharathi; 9-25 இடைவேளை; அகில பாரத நாடக நிகழ்ச்சி; 10-00 பாரதி விழா; 10-30 ஒலிபரப்பு முடிவு.

**திருச்சி**
**11—9—58**

389·6 மீ. (770 கி. சை.)

7-00 [illegible]; 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள்; 7-15 தமிழில் செய்தி; 7-30 பழம்பெரும் நாடு இசை நிகழ்ச்சி; 8-00 ஆங்கிலத்தில் செய்தி; 8-15 ஒலிபரப்பு முடிவு.

12-30 நடுத்தரப்பள்ளிகளுக்கு; 1-00 கதம்பம்; 1-40 ஹிந்தியில் செய்தி; 1-50 ரவிசங்கர் ஸிதார்; 2-00 தமிழில் செய்தி; 2-10 உயர்தரப் பள்ளிகளுக்கு; 2-40 இடைவேளை; 2-45 வானிலை அறிவிப்பு, ஒலிபரப்பு முடிவு.

மாலை. 5-45 இசைப்பயிற்சி; 6-00 அறிவிப்புகள்; 6-05 பிராந்தியச் செய்திகள்; 6-15 கிராம நிகழ்ச்சிகள்; 7-15 தமிழில் செய்தி; 7-30 படிக்கும் பழக்கம்; 7-40 இம் மாதப் பாடல்; 7-45 மழைபாட்டு இசை ஓவியம்; 8-00 ஒளி படைத்த பாரதி: கவிப் பொழிவு; 8-30 டெல்லி அஞ்சல்; 8-40 சித்ரகானம்; 8-55 இடைவேளை; 9.00 ஆங்கிலத்தில் செய்தி; 9-15 சுபத்த சங்கீதம்; 9-30 அகில பாரத நாடக நிகழ்ச்சி; 10-00 ஒலிபரப்பு முடிவு.


ஜனசக்தி பிரஸ்ஸில் அச்சிட்டு வெளியிட்டவர்: எஸ். கிருஷ்ணசாமி
ஆசிரியர் ப ஜீவானந்தம்.
முகவரி; 32, பிராட்வே சென்னை-1.
Janasakthi, Tamil Daily.
32, Broadway, Madras-1.